*Kumaraṉ*
*Āram 24, muttu 1*
*August 22, 1946*

Record no. 313

REGD NO. M. 1823.

12 பக்கங்கள்

மலாயாவில் 12-சத
இந்தியாவில் 2-அணா

விளம்பரம்
நோட்டீஸ் கோர்ட்
விளம்பரம் முதலிய
களுக்கு இஞ்சு
ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்த
மானது ரூ. 1-8-0
ஒப்பந்த விளம்பரத்
துக்கு மானேஜருக்
கெழுதவும்

# குமரன்

சந்தா விபரம்
உள் நாடு வருஷ
ஒன்றுக்கு ரூ. 6-0-0
ஆறு மாதம் ரூ. 3-8-0
சிலோன் ரூ. 6-0-0
பர்மா, மலாய்
முதலிய
வெளிநாடு
ஒரு 1-க்கு ரூ. 8-0-0

வியாழன் தோறும் வெளிவரும் மாதப் பதிப்பும் சேர்ந்தது. PUBLISHED EVERY THURSDAY

ஆரம்24 | மகளிர் இல்லம், விய ஆவணி 6உ. (22—8—46) | முத்து 1

## மலாயா நாட்டுச் செய்திகள்

### சிங்கப்பூர்

அரசாங்கம் விரைவில் 19 லட்சம் கஜம் துணி வினியோகம் செய்யுமென்றும் அப்போது முக்கியசேவைகளிலும் வர்த்தக ஸ்தாபனங்களிலும் வேலை செய்யும் 1லட்சம் தொழிலாளர்களுக்கு தலா 10 கஜம் வீதம் கொடுக்கப் படுமென்றும் தெரிகிறது.

துணியின் ரகத்தையொட்டி விலை கஜம் ஒன்றுக்கு 65 காசு முதல் $1-20 வரை விற்க வேண்டுமென கட்டுப்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

வெள்ளை டிரில், காக்கி டிரில் வெள்ளை ஷர்ட்டிங் துணி இவைகளே வினியோகத்துக்கு வந்திருப்பவை. ஏற்கனவே மனுக்கள், சம்பந்தப்பட்ட இலாகாவிற்கு வந்துள்ளதென்றும் அரசாங்க ஏஜெண்டுகளாக நியமிக்கப்பட்டிருக்கும் ஸ்தாபனங்களின் மூலம் சப்ளைகள் பெறுவதற்கான டெலிவரி ஆர்டர்கள் கொடுக்கப்பட்டு வருகிறதென்றும் தெரிகிறது.

முதலில் அரசாங்க முனிசிபல் இலாகாக்களுக்கும், ஹார்பர் போர்டுக்கும், பல்வேறு வர்த்தக சங்கங்களில் அங்கம் பெற்றிருக்கும் ஸ்தாபனங்களுக்கும் வினியோகிக்கப்படுமென்று தெரியவருகிறது.

தனிப்பட்ட கம்பெனிகள் ஏற்கனவே வெளிநாடுகளிலிருந்து ஜவுளிக்கு ஆர்டர்கள் செய்துள்ளன. இன்னும் சில மாதங்களுக்குள் சப்ளை வந்துவிடுமென நம்பப்படுவதோடு அப்பொழுது பொது ஜனங்கள் தங்களின் ஜவுளித் தேவைக்கு அரசாங்கத்தை எதிர் பார்த்திருக்க வேண்டியிராது என்றும் கூறப்படுகிறது.

### மலாயா யூனியன்

பிரிட்டிஷ் அரசாங்கம் மலாயா யூனியன் திட்டத்தைக் கைவிட்டுவிட்டு, கவர்னருக்குப் பதிலாக ஒரு ஹைகமிஷனருடன் கூடிய கமிட்டித் திட்டமொன்றை ஏற்படுத்துமெனத் தெரிகிறது.

அவ்விதத் திட்டத்தைக் குறிப்பிடும் செய்தி யொன்றை சிங்கப்பூர் பிரீபிரஸ் பத்திரிகை பிரசுரித்திருப்பதோடு, அத்திட்டத்தை காலனி மந்திரிக் காரியாலயமும் ஒப்புக்கொண்டிருப்பதாகக் கூறுகிறது.

மலாயாவின் எதிர் காலத்தைப் பற்றி பிரிட்டிஷ் அரசாங்கம் ஜனவரியில் வெளியிட்ட திட்டமென்னவெனில் சிங்கப்பூர் ஒரு தனிக்காலனியாயிருக்க வேண்டுமென்பதும், பினாங்கையும் மலாக்காவையும் மற்ற மலாய் சமஸ்தானங்களுடன் சேர்த்து ஒரு மலாயா யூனியனை ஏற்படுத்த வேண்டுமென்பதும், மலாயா யூனியன் பிரஜாவுரிமை முறை இருக்க வேண்டு மென்பதுமேயாகும். இத்திட்டத்திற்கு மலாயர்கள் அளித்த வரவேற்பு பல்வேறு விதமாயிருந்தது. மலாயா யூனியன் முதலாவது கவர்னர் ஜெனரலாக திரு. மால்கம் மாக்டொனல்டு மே மாதத்தில் சிங்கப்பூரில் பதவியேற்ற வைபவத்தின் போது மலாய் சுல்தான்கள் எவரும் விஜயம்செய்யவில்லை.

மலாயா யூனியன் திட்டத்தின்படி மலாய் சமஸ்தானங்களில் பூரண அதிகார உரிமை ஆரும் ஜார்ஜ் மன்னருக்கு அளிக்கப்படுகிறதென்ற காரணத்தை முன்னிட்டு அத்திட்டத்தை சுல்தான்கள் ஆட்சேபித்தனர்.

தற்போது இவ்விஷயம் முழுவதும் தீவிரமாக ஆலோசிக்கப்பட்டு வருகிறதென்றும், தாங்கள் இன்னமும் ஓர் அறிக்கை விடுக்கக் கூடிய நிலையிலில்லையென்றும், காலனி மந்திரிக் காரியாலயம் அறிவித்தது.

காலனி மந்திரிக் காரியாலய அறிக்கை வெளியிடப்படும்போது அது இன்றைய சிங்கப்பூர் செய்தியில் அடங்கிய விவரங்களையே பெரும்பாலும் பின்பற்றியிருக்குமென விஷயமறிந்த வட்டாரங்கள் எதிர் பார்க்கின்றன,

அச்செய்தி சரியாயிருக்குமானல் "கிழக்கிந்தியத் தீவுகளில்" பிரிட்டிஷ் நிர்வாக யந்திரத்தை திருத்தியமைக்க ஆரம்ப வழி காட்டப்படலாமென்று கருதப்படுகிறது.

தற்போது சிங்கப்பூருக்கு ஒரு கவர்னர் இருப்பதும், மலாயா யூனியனுக்கு ஒரு கவர்னர் இருப்பதும், தற்போது ஒரு ஆக்டிங் கவர்னரைக் கொண்டுள்ள ஜாவாவிற்கும் இம்மாதத்தில் சாம்ராஜ்யத்துடன் இணைக்கப்படவிருக்கும் பிரிட்டிஷ் வட போர்னியோவுக்கும் இம்மாதத்தில் தனித்தனியே கவர்னர்களை நியமிக்க உத்தேசிக்கப்பட்டிருப்பதும் மிகவும் விரிவானதொரு திட்டமாகத் தோன்றலாம்.

தற்போதைய முறைதான் முடிவானதென்பதில்லை என்றும், கிரியாம்சையிலான அனுபவத்திற்குப் பிறகு சிபார்சுகள் செய்யப்படலாமென்றும் பல வாரங்களுக்கு முன்னர் கவர்னர் ஜெனரல் கூறினர்.

சுமார் 60 லட்சம் ஜனத்தொகையைக் கொண்ட பிரிட்டிஷ் கிழக்கிந்தியத் தீவுகள் எல்லாவற்றிற்குமாக ஒரு கவர்னர் ஜெனரல் 4 கவர்னர்கள், ஒரு ஸ்பெஷல் கமிஷனர் (இவரே இப்பிரதேசத்தின் அன்னிய நாட்டு உறவுகளுக்கும், உணவுப் பிரச்னைகளுக்கும், அன்னியநாட்டு காரியாலயத்திற்கு ஆலோசனையளிக்கப் பொறுப்பானவர்) ஆகியோர்கள் இருப்பது சுட்டிக்காட்டப்படுகிறது.

### சாவாக்

வெள்ளை ராஜாக்களின் ஆதிக்கத்திலிருந்து வந்த சாவாக் ஜுலை 1உயிலிருந்து பிரிட்டிஷ் காலனியாகிவிட்டது. இதையொட்டி அன்று 'ஆஸ்தான்' மண்டபத்தில் நடந்த கூட்டத்தில் உதவிக் காரியதரிசி டி. வி. வொயிட் ராஜா புரூக்கின் ஆட்சியின் முடிவைக் குறிக்கும் பிரகடனத்தை வாசித்தார்.

சரவாக் தலைநகரான கூச்சிங்கில் கொடிகள் கட்டப்படவில்லை; டாயக் பிரதிநிதிகளும் வரவில்லை. மலாய் சமூகத்தின் தலைவரான டாத்தோ கெட்டிங்கியும், சீன சமூகத் தலைவரான ஒங் தியாங் ஸ்வியும் வரவில்லை. என்றாலும் அவர்களுக்குப் பிரதிநிதியாக அவர்களின் புதல்வர்களை மட்டும் அனுப்பி யிருந்தனர்.

வைபவம் நடந்த மண்டபத்திற்கு வெளியில் மலாய்க்காரர்களும், சீனர்களுமாக சுமார் 2000 பேர்களே கூடியிருந்தனர். எச். எம். எஸ். அலக்ரிட்டி என்ற கப்பலில் கவனர்-ஜெனரல் மால்கம் மெக்டொனல்டு வந்திறங்குவதற்கு முன் போலீஸ் 'பாண்டு' சரவாக் தேசிய கீதத்தை கடைசித் தடவையாக வாசித்தது.

சரவாக் ராஜா அனுப்பியிருந்த ஒரு தந்தியும் வைபவத்தின் ஆரம்பத்தில் வாசிக்கப்பட்டது.

"எனது செய்கையால் சரவாக் லாபமடையும் என்ற நம்பிக்கையோடு எனது சுமையைக் கீழே வைக்கிறேன்" என்று அவர் அச்செய்தியில் குறிப்பிட்டிருந்தார்.

ஆக்டிங் கவர்னர் ஸி. டபிள்யூ. டாசனின் பதவியேற்பு சடங்கு முடிந்த பிறகு கவர்னர்-ஜெனரல் மெக்டொனல்டு பேசியபோது, "சரவாக்கை பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்குக் கொடுப்பது சம்பந்தமாக இங்கு அபிப்பிராய பேதமேற்பட்டிருந்தது. எனக்குத் தெரியும். ஆனல் காலடைவில் உங்கள் பயம் மறைந்து விடுமென நம்புகிறேன்" என்று தெரிவித்தார்.

வயது முதிர்ச்சியினலும் தேக அசௌகரியத்தினலும் வைபவத்தில் கலந்து கொள்ளாமலிருந்த டாத்தோ கெட்டிங்கியையும், ஒங் தியாங் ஸ்வியையும் மெக்டொனல்டு சிங்கப்பூருக்குத் திரும்புவதற்கு முன் சந்திக்க உத்தேசித்திருப்பதாகத் தெரிகிறது.

[சாவாக் என்பது வடமேற்கு போர்னியோவில் இருக்கிறது. இந்த ராஜ்யத்தின் விஸ்தீரணம் 42,000 சதுர மைல். பிரிட்டனுக்குட்பட்ட ஒரு ராஜாவின் ஆளுகையில் இது வரை இருந்து வந்தது. இதன் ஜனத்தொகை 6,00,000. இங்கிருந்து ஜவ்வரிசி, ரப்பர் ஏற்றுமதி செய்யப்படுகின்றன.]

### ரப்பர் தோட்டத்தில் வேலை நிறுத்தம் முடிவு

கெகிரி செம்பிலானைச் சேர்ந்த பஹோ ரப்பர் தோட்டத் தொழிலாளர்கள் தங்களது கோரிக்கைகளைத் தோட்ட அதிகாரி மறுத்ததின்பேரில் கடந்த 1-6-46 முதல் வேலை நிறுத்தம் செய்தனர். அவருடைய உதவி அதிகாரியும், 5-6-46 ல், சமரசம் செய்ய

( 12-ம் பக்கம் பார்க்க )

## பொதுமக்களே உஷார்

சிவகங்கை உஷார் சங்கக் காரியதரிசி அறிவிப்பதாவது:-

உங்கள் ஊரில் உங்களுக்காக இருக்கும் ரேஷன் பொருள்களை ஒரு சிலர் கள்ளமார்க்கெட்டில் வாங்கி கண்மூடித்தனமாக விரயம் செய்கிருர்கள். கல்யாணம், களியாட்டம், சாவு, இன்னும் அனேக விழாக்களில் தேவைக்கு அதிகமான பொருள்களைச் சேமித்து வைத்து ஏழைமக்களைத் திணம் உண்ணக்கூட விடாமல் விரையம் செய்கிருர்கள். ஆதலால் உங்கள் ஊரில் வரம்பு மீறி நடைபெறும் விசேடங்களின் தேதி, சேமித்து வைத்திருக்கும் இடம் அந்த ஊர் உணவுக் கமிட்டி அங்கத்தினர்களின் பெயர் அருகாமையிலுள்ள பிர்க்கா சப்ளை ஆபிசரின் பெயர் முதலியன தெளிவுடன் எழுதி முன்னதாகவே, எங்களுக்குத் தெரியப்படுத்துங்கள். உங்கள் உணவுப் பொருள்கள் உங்களை விட்டுப் போகாமல் நாங்கள் காப்பாற்ற முடியும். சட்ட விரோதமாய் நடப்பவர்களை எங்கள் சங்கத்தினின்றும் தக்க நடவடிக்கை எடுக்க ஏற்பாடு செய்துள்ளோம். உங்கள் ஊர் கள்ள மார்கெட் வியாபாரிகளையும் தெரியப் படுத்துங்கள்.

### இந்தியாவுக்கு உணவுக்கோட்டா போதாது

இந்தியா வாங்கியுள்ள 3 லட்சம் டன் உணவுப் பொருள் அனுப்புவதைத் துரிதப்படுத்த சென்றிருக்கும் இந்திய உணவுத் தூதுக் கோஷ்டித் தலைவர் திவான் சமன்லால் கூறுவதாவது:—

இந்தியாவுக்குப் போதுமான அளவு உணவு தானியங்கள் ஒதுக்கப் படவில்லை. தற்சமயம் தென்னிந்தியாவில் நிலைமை மோசமாக இருக்கிறது. அதிக உணவு கப்பலேற்றப்படா விட்டால் வட இந்தியாவுக்கும் இந் நிலைமை பரவி விடும். இந்நிலைமை நீடித்தால் நவம்பர் மாதத்தில் இந்தியர்கள் பட்டினி கிடக்க நேரிடும்.

### பிரஞ்சு இந்தியாவில் பங்கீடு கிடையாது

காரைக்கால் வட்டாரத்தைச் சேர்ந்த மேயர்கள் ஒன்றுகூடி அரிசி பங்கீடு வேண்டாமென்றும், எப்போதும் போலவே நீடித்து நடக்கலாமென்றும் தீர்மானித்தனர்.

### கலைமகள் சங்கம்
### குருவிக் கொண்டான்பட்டி

நமது சங்கத்திற்கு திருவாளர்கள் குப. சித. குமரப்பசெட்டியார். அ. சொ. சித. சிதம்பரம் செட்டியார் அ. சொ. தே. தேனப்ப செட்டியார் அ. அரு. அண்ணாமலை செட்டியார், அ. அரு. சொக்கலிங்கம் செட்டியார் நா. அள. அளகப்ப செட்டியார் ஆகியோரால் நன்கொடையாக அமைத்துத் தரப்பெற்ற பிலிப்ஸ் 6. வால்வ் ரேடியோ திறப்பு விழா 12-8-46 திங்கட்கிழமை மாலை 5. 30 மணிக்கு திரு. குப. சித. சிதம்பரம் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. விழாத் தலைவரால் மேற்படி ரேடியோ திறந்து வைக்கப்பட்டதும் காரியதரிசியால் நன்கொடையாளர்களுக்கு மற்றும் உதவிசெய்தவர்கட்கும் நன்றி தெரிவிக்கக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

## நவீன டார்ஜான்

பாக்தாத் டிரான்ஸ்ஜார்டான் பாலைவனத்தில் 15 வயதுள்ள பையன் ஒருவன் கண்டு பிடிக்கப்பட்டான். அவன் மான்களைப் போன்று ஒரு மணிக்கு 50 மைல் வேகத்தில் ஓடுகிருன். புல்களைத் தின்கிருன். மான்களைப் போன்றே மற்றபாவனைகளும் அவனிடத்தில் இருக்கின்றன. பிறந்தவுடன் அவன் தாயால் பாலைவனத்தில் தனியாகக் கிடத்தப்பட்டு மான்கள் கூட்டத்தில் வளர்ந்து வந்ததாகத் தெரிகிறது. இப்பொழுது அந்தப்பையன் ஈராக்கி பெட்ரோலியம் கம்பெனியைச் சார்ந்த டாக்டர் மூசாஜால் பட்டின் சம்ரக்ஷணையில் யிருந்து வருகிருன். பாலைவனத்தில் மான்வேட்டைக்குப் போகும் போது மான்களோடு சேர்ந்து இந்தப் பையன் ஓடினுன். வேட்டைக்குப் போனவர்களில் ஒருவர் மோட்டாரில் மான்களைத் துரத்திக் கொண்டு போகும் பொழுது இந்தப் பையனைப் பார்த்து விட்டார். உடனே துப்பாக்கியினுல் சுடுவதை நிறுத்தச் சொன்னுர். ஒரு மணிக்கு 50 மைல் வேகத்தில் மான்களோடு சேர்ந்து பையனும் ஓடினதாகத் தெரிந்திருக்கிறது. கடைசியாக பையனைப் பிடித்து விட்டார்கள். ஆனுல் பையன் ஓடின வேகத்தில் களைப்புண்டு மயக்கமுற்று சாகுந்தருவாயில் இருந்திருக்கிருன். பிறகு அவனுக்கு வேண்டிய சிகிச்சை செய்து உயிர் பிழைத்துக் கொண்டான். லாரன்ஸ் இளவரசர் என்பவரின்வீட்டில் பையன் முதல் நாள் தங்கியிருந்த பொழுது வீட்டுமுகடுகளில் ஏறிக்கொண்டு ஒரு வீட்டிலிருந்து மற்ருெரு வீட்டிற்குத் தாவிக் கொண்டே திரிந்தான். கஷ்டப்பட்டு அவனை கீழே இறங்கி வரும்படி செய்தனர். அவனுடைய வேகத்தை கணக்கிட்டுப் பார்ப்பதற்கு அவனை ஓடவிட்டு குதிரைகளையும் கார்களையும் விட்டு பின் தொடர்ந்து பார்த்ததில் 2 மணி நேரங்களுக்குப் பிறகுதான் அவனைப் பிடிக்க முடிந்தது. சிலர் அவனை பாதி மனிதன் பாதி மான் என்று சொல்லுகிருர்கள். ஆனுல் உடற்கூடுகளைக் கவனிக்கும்பொழுது மனிதனுக்குள்ள குணங்கள்தான் இருக்கிறதெனக் கண்டு பிடித்திருக்கின்றனர். ஆனுல் வேகம் மான் வேகத்தை ஒத்திருக்கிறது. மனிதர் பேச்சு வரவில்லை. பேச்சுக்களையும் தெரிந்து கொள்ள முடியவில்லை. ஆனுல் மான்களைப் போன்று சப்தமிடுகிருன். இப்பொழுது மனிதர்களிடையே வசித்து வருவதால் மனித சுபாவத்தை அடைய முடியுமென்று நம்புகிருர்கள். அச்சப்பாலைவனத்தில் இந்த மாதிரி பிள்ளைகளை பெற்ருேர்கள் தனியாக விட்டு விடுவது சகஜம்தான் என்றும் ஆனுல் பெரும்பாலும் குழந்தைகள் இறந்து விடுகின்றனர் என்றும், ஒன்றிரண்டு தப்பித் தவறி இந்த மாதிரி மிருகங்களுக் கிடையில் வளர்ந்து வருகின்றனர் என்றும் சொல்லுகிருர்கள்.

## தமிழ்மொழி வாழ்க

## புதுக்கோட்டையில் சீனி

புதுக்கோட்டை ரேஷனிங் ஆபீஸர் அறிவிப்பதாவது.—

வியஹு ஆடிமீ 17உ குமரன் பத்திரிகையில் புலவர் போட்டி என்ற அங்கத்தின் கீழ் புதுக்கோட்டை சமஸ்தானத்தில் ஜீனி பங்கீடு பிராமணர்களுக்கு மூன்று யூனிட்டும் மற்றவர்களுக்கு இரண்டும் ஒன்றும் ஐந்தாம் குலத்தார்க்கு அடியோடு இல்லை எனறும் தெரிகிறது என்று பிரசுரிக்கப் பட்டிருக்கிறது. சமஸ்தானத்தில் உள்ள குடும்பங்களிலுள்ளவர்கள் எல்லோரும் ஜீனி உபயோகிப்பவர்களாயிருந்தால் முதல் வகுப்பாகவும், ஷை குடும்பங்களில் சிலர் ஜீனி உபயோகிப்பவர்களாயிருந்தால் இரண்டாவது வகுப்பாகவும், ஜீனி உபயோகிக்காத குடும்பங்களாயிருந்தால் மூன்ருவது வகுப்பாகவும் பிரித்து ஜீனி பங்கீடு செய்யப்பட்டிருக்கிறதே அல்லாது தங்களுடைய பத்திரிகையில் பிரசுரிக்கப் பட்டிருக்கிறபடி ஜாதி விகிதப்படி இல்லை என்று அறிவிக்கப்படுகிறது.

### சோழிய வேளாளர் சங்கம்
### தென்மாப்பட்டு திருப்பத்தூர்.

11-8-46 ஞாயிற்றுக் கிழமை மாலை 4-மணிக்கு சோழிய வேளாளர் சங்க மகாசபைக் கூட்டம் அ. ராமசாமி பிள்ளை அவர்கள் தலைமையின் கீழ் நடைபெற்றது. கீழ்க்கண்ட நிர்வாகஸ்தர்களைக் கொண்டகமிட்டி 1946-47 வருஷத்திற்கு அமைக்கப்பெற்றது. தலைவர் நா. சிவசாமி பிள்ளை, உப தலைவர் ந. பழனிவேலுப் பிள்ளை, காரியதரிசி மரு. குமாரசாமி பிள்ளை, உப காரியதரிசி வயி. பரமசிவம் பிள்ளை, பொக்கிஷதார் ராம. மரு, சண்முகம் பிள்ளை, மற்றும் நான்கு அங்கத்தினரும் தேர்ந்தெடுக்கப்பெற்றனர்.





## நோட்டீஸ்.

தேவகோட்டை
டி. மு. கோர்ட்டு
O. P. No. 35 of 1946.

சொக்கலிங்கம் புதூர் S. L. ராமநாதன் செட்டியார் என்ற RM. VR. ராமநாதன் செட்டியார். } மனுதார்

ஷை நிம்பரில் சொக்கலிங்கம் புதூர் லேட் RM. VR. லெக்ஷிமி ஆச்சிக்கு வரவேண்டிய துகையை வசூல் செய்ய வார்சு சர்ட்டிபிகெட்டு கோரும் மனு 26-8-1946உ வாயிதா

— T. G. ராமஸ்வாமி ஐயங்கார்
மனுதார் வக்கீல்.



## நடவாத திருமணம்

(கோ. பா.)

கழுத்தில் சலங்கைகள் அணிந்த காளைகள் பூட்டிய வில்வண்டிகள் ஐந்தாறு, துரும்பூரிலிருந்து துக்கம்பட்டிச்சாலை வழியாக வெகுவேகமாக ஓடிக்கொண்டிருந்தன. கிராமப்புறங்களில் மாடுகளுக்கு சலங்கைகள் அணிவித்து வில்வண்டிகளில் பூட்டிப் பிரயாணஞ் செய்வது ஒரு தனிக் கௌரவம். கல்யாணக் காலங்களில் தான் பெரும்பாலும் அப்படிப் பிரயாணஞ் செய்வது வழக்கம். மேலும் பணக்காரர்கள்தான் அப்படிச் செய்ய முடியும். அப்படியே மாப்பிள்ளை விட்டார்தான் பெண் வீட்டுக்கு துரும்பூரிலிருந்து போய்க் கொண்டிருக்கின்றனர். அவர்களில் ஆண் பெண் குழந்தைகள் அத்தனை பேரும் கல்யாண விசேஷ தினத்திற்குரிய ஆடம்பரமான ஆடையாபரணங்களை அணிந்திருந்தனர் என்று சொல்ல வேண்டியதில்லை. மாப்பிள்ளை ஒரு தனவந்தர். 50 வயதுக்கு குறைவில்லை என்ருலும் பணக்காரர் அல்லவா? அவரைச் சூழ்ந்தவர்கள் சும்மா விடுவார்களா? மூத்த மனைவி இறந்து விட்டபடியால் 16 வயதுள்ள இரண்டாம் மனைவியைத் தேடி முடிவு செய்து விட்டனர். அன்று இரவு 7½க்கு மேல் 8½க்குள் முகூர்த்த நேரம். குறிப்பிட்ட நேரத்திற்கு 2 மணிக்கு முன்னதாகவே போய்ச் சேர வேண்டுமென்பதற்காகவே வண்டிகள் வேகமாக ஓடிக்கொண்டிருக்கின்றன. பெண் வீட்டாரும் அவர்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர். அவர்களுக்குத் தனியாக ஒரு வீடு தங்குவதற்கு ஏற்பாடு செய்திருந்தனர். மாலை 5 மணிக்கெல்லாம் துக்கம்பட்டி போய்ச் சேர்ந்தனர். பெண்வீட்டாரும் வெகு ஆடம்பரத்தோடு மாப்பிள்ளையை வரவேற்று அவர்களுக்கென ஏற்பாடு செய்திருந்த வீட்டிற்கு அழைத்துச் சென்றனர். மாப்பிள்ளை வயது சென்றவர் என்பது துக்கம்பட்டியாருக்கு முன்னமேயே தெரிந்திருக்கும் போல் இருக்கிறது. பலபேர் ஆண்களும் பெண்களும் மாப்பிள்ளையை வந்து பார்த்த வண்ணமாயிருந்தனர். மாப்பிள்ளையும் வயது சென்றவர் என்பதற்காக சற்றும் சளைக்க வில்லை. வெகு அலங்காரமாகத் தன்னை மேக்கப் செய்து கொண்டார்.

பெண் வீட்டாரில் பெண்ணைத்தவிர மற்றெல்லோரும் முகூர்த்த நேரம் கிட்டி விட்டதென நன்ருக அலங்காரம் செய்வதில் வெகுவாக ஈடுபட்டிருந்தனர். பெண்ணை மணவறையில் அமர்த்த அலங்கரிக்க வேண்டுமென்ற எண்ணமே அவர்களுக்குத் தோன்றவில்லை. அதற்குக் காரணம் பெண்ணும் உற்சாகம் குன்றி அவர்கள் கண்ணுக்குப் படாமல் ஒருபக்கத்தில் ஒதுங்கி யிருந்தது. மாப்பிள்ளை இளம் வயதாயிருக்கும் பொழுது எடுத்த போட்டோப் படத்தை பெண்ணுக்குக் காட்டி ஏமாற்றினர். அந்த இளம் வயது போட்டோகூட அவளுக்குப் பிடிக்கவில்லை என்ருலும் அதன் படியாவது மாப்பிள்ளை யிருப்பாரா என்ற ஒரு சந்தேகம் பெண்ணுக்கு ஏற்பட்டிருந்தது. அந்தச் சந்தேகத்தை நிவர்த்திக்க மணவறைக்குப் போகுமுன் எப்படியும் மாப்பிள்ளையை மறைந்து நின்று பார்த்துவிட வேண்டும் என்பதில் கண்ணுங் கருத்துமாய் சமயம் பார்த்துக் கொண்டு ஜன்னல் வழியாகப் பார்த்துவிட்டாள். அவ்வளவுதான் தன்னுடைய வாழ்க்கை அன்ருேடு முடிந்ததென்பதை உணர்ந்தாள். முகூர்த்த நேரம் நெருங்கிக் கொண்டு வருகிறது. மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டாருக்குச் சொல்லியனுப்புகிருர்கள். அப்பெழுதுதான் பெண்ணைத் தேடுகிருர்கள். வீட்டிற்குள் தென்பட வில்லை. பெண்ணின் தாயார் மனம்கலங்குகிருள். பக்கத்து வீடுகளில் தேடுகிருர்கள். எங்கும் காணவில்லை. பெண் வீட்டில் ஏகக் கலவரம். ஒருவரை யொருவர் விசாரித்துக் கொள்ளுகிருர்கள். என்ன செய்வது? ஊருக்கு வெளியிலும் நாற்புறங்களின் பாதைகளில் தேடியும் காணுது திரும்புகின்றனர். பெண்ணின் தாயார் ஒரு மூலையில் உட்கார்ந்து ஒப்பாரி வைக்க ஆரம்பித்து விட்டாள். இதற்குள் மாப்பிள்ளை வீட்டில் மேள வாத்தியம் முழங்குகிறது. பெண்வீட்டிற்குப் புறப்பட்டு விட்டனர். வரவேண்டாமென்றும் பெண்ணைக் காணவில்லை யென்றும் யார் வந்து சொல்வது. பெண் வீட்டைச் சேர்ந்த சில அறிவாளிகள் வேருெரு பெண்ணையாவது பிடித்து மணவறையில் உட்காரவைத்து விடலாமா என்று அதற்காவன செய்ய முயற்சித்தனர். பெண் என்ன கடைச் சரக்கா? விலை கொடுத்து உடனே வாங்குவதற்கு? யாரும் இணங்கவில்லை. மாப்பிள்ளை விட்டாரும் மேள வாத்தியங்கள் முழங்க பெண் வீட்டில் நுழைந்து விட்டனர். அவர்களைச் சிலர் வரவேற்று உட்காரச் செய்து சந்தனம் தாம்பூலாதிகள் வழங்கினர். வழங்கியவர்களும் ஒவ்வொருவராக வெளியே கிளம்பிவிட்டனர். மாப்பிள்ளை வீட்டாரும் என்ன நேரமாகிவிட்டது பெண்ணைத் தயார் செய்து மணவறைக்குக் கூட்டி வர வேண்டாமா என்று கேட்கின்றனர். அவர்கள் பேச்சைக் கேட்க அங்கே யாரும் இல்லை. ஒரு மூலையில் ஏங்கி ஏங்கி அழுகும் குரல் கேட்கிறது மாப்பிள்ளை சுற்று முற்றும் பார்த்தார். ஏன்? குற்றமுள்ளவருக்குத் தானே குணதோஷம் தெரியமுடியும் பெண் அழுது கொண்டிருக்கிருள் போல் இருக்கு. அதற்கென்ன? முன்பேசியதற்கு அதிகமாக நகைகள் போடுவதாகச் சொல்லி வாருங்கள் என அருகே யிருந்த மாமன் முறையாரிடம் சொல்லி அனுப்பினுர். பெண் வீட்டின் கொல்லைப் புறமாகப் பெண் வீட்டைச் சேர்ந்தவர்கள் அத்தனை பேரும் கம்பி நீட்டி விட்டனர். பெண்ணின் தாயார் தான் பாக்கி. அவள் தான் விம்மி விம்மி அழுது கொண்டிருக்கிருள். தகப்பனுர் பெண்ணைத் தேடுவதில் ஈடுபட்டிருந்தார். மேளம் வாசிப்பவர்களும் இருக்கும் நிலைமையைக் கவனித்து அமைதியை ஏற்படுத்தினர். உட்கார்ந்திருந்தவர் ஒவ்வொருவராய் எழுந்திருந்து என்ன என்பதை விசாரணைசெய்தனர் மாப்பிள்ளைக்கும் என்ன செய்வதெனத் தோன்றவில்லை பெண்ணைக் காணவில்லை யென மாப்பிள்ளை உள்பட ஊரார் அனைவருக்கும் தெரிந்து விட்டது. மாப்பிள்ளையும் கடைசியாக இருப்பிடமிருந்து எழுந்திருக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. வேஷத்தைக் கலைக்க மனமில்லாத வராய் இங்குமங்குமாக நடந்து கொண்டு கொஞ்சங் கொஞ்சமாக வேஷத்தைக் கலைக்க முயன்ருர் சமயல்காரர்கள் நிலைமை ரொம்பவும் பரிதாபகரமாயிருந்தது. அவர்களுக்கு சாமான்கள் எடுத்துக் கொடுப்பார் யாருமில்லை. அங்குமிங்குமாக ஓடி ஆடி ஆட்களைத் தேடிப்பார்த்தனர். அப்பொழுது ஒருவரும் இல்லை. அரைகுறையாக சமைத்து வைத்திருந்த பதார்த்தங்களை உண்டு விட்டு அப்படி அப்படியே பாத்திர பண்டங்களை அடுப்பிலும் கீழுமாகப் போட்டு விட்டு போய் விட்டனர். அடுப்படியில் ஏகமாய் பற்றல் நாற்றமும் புகையும் கிளம்பி பெண் வீட்டை ஒரு புறம் அலங்கோலப் படுத்திக் கொண்டிருந்தது. பெண் வீட்டாருக்குத் துக்கம். மாப்பிள்ளை வீட்டாருக்கு கோபமும் ஆத்திரமும். இந்த நிலைமையில் அன்று இரவு முழுதும் பெண் வீட்டில் அமர்க்களமாயிருக்கிறது. அந்தஊர் முழுதமே அன்று இரவு பூராவும் விழிப்பு கல்யாணவைபவம் தீபாவளி வைபவம் போல் காணப்பட்டது. இன்னொரு வேடிக்கை யென்ன வென்ருல் பெண் வீட்டாரும் மாப்பிள்ளை வீட்டாரும் இவ்வளவு அமர்க்களத்திலும் நேருக்கு நேராக பெண்ணைக் காணுத விஷயத்தைப் பற்றி பேசி மோதிக் கொள்வதற்குச் சந்தர்ப்பம் இல்லாமல் போய் விட்டது. அவரவர்கள் வெட்கப்பட்டுக் கொண்டு ஒருவரையொருவர் காணுது விலகிக்கொள்ளும்படியான நிலைமை ஏற்பட்டுவிட்டது.

கதிரவனும் தன் கிரணங்களை வீசி வெளிக்கிளம்பும் நேரத்திற்குச் சற்று முன்னதாக பெண் வீட்டுக்குப் பக்கத்தில் வசித்து வரும் சில பெண்கள் குடிதண்ணீர் கொண்டு வர மந்தையிலிருந்த ஒரு கிணற்றிற்குப் போனுர்கள். கிணற்றுப் படியில் நின்று நீர் இறைக்க வாளியை கிணற்றினுள் விடும் பொழுது வாளி ஏதோ ஒரு சிறு கல்லில் மோதுவது போல் ஒரு பெண் உணர்ந்தாள். உடனே கீழே உற்று நோக்கினுள். ஒரு பெண்ணின் பிரேதம் மிதந்து கொண்டிருந்தது. தலைமுடி சிதறி நீர்மட்டத்துக்குப் பரந்து கிடக்கிறது. அவ்வளவு தான் தாங்கள் கொண்டு வந்த குடங்களையும் போட்டு விட்டு கல்யாணப் பெண் கிணற்றில் மிதக்கிருள் எனறு கத்திக் கொண்டே ஊருக்குள் ஓடினுர்கள். ஜனத்திரள் கூடி விட்டது. பெண் வீட்டார் மாப்பிள்ளை வீட்டார் அக்கம் பக்கம் உள்ளவர்கள் அத்தனை பேரும் கிணற்றைச் சுற்றிக் கூடி விட்டனர். பணத்திற்கு ஆசைப் பட்டுத் தலை நரைத்த 50 வயதுக் கிழவனுக்கு 16 வயது இளமங்கையை மண முடிக்க விரும்பியதன் பலன் கைமேல் கிட்டி விட்டதென பெண் வீட்டாரைப் பழிக்காதார் கிடையாது. இதற்குள் போலீசார் ஸ்தலத்திற்கு வந்து விட்டனர். பிரேதத்தை வெளியில் எடுத்து ஒரு பக்கமாகக் கிடத்தினுர்கள். கல்யாணப் பெண்ணின் தாய் அலறி ஓடி பிரேதத்தின் மேல் விழுந்து கட்டி அழுதாள். முகம் மூடப்பட்டிருந்தது. கூடியிருந்தவர்களில் ஒருத்தி முகத்துணியைச் சற்று நீக்கினுள். கல்யாணப் பெண்ணின் பிரேதமல்ல. ஒரு வண்ணனுடைய மனைவி தன் கணவனுேடு அடித்துக் கொண்டு முதல் நாள் இரவு 10 மணிக்குமேல் விழுந்து விட்டாள். கூடியிருந்தவர்கள் அத்தனை பேரும் வெட்கித் தலை குனிந்து வீடு திரும்பினர், மாப்பிள்ளை வீட்டுக்காரர் தங்கள் ஊருக்குத் திரும்பத் தயார் ஆனுர்கள்.

பாவம் மாப்பிள்ளை வீட்டுக்காரர். முதல் நாள் இரவும் சாப்பிடவில்லை. காலையிலும் அவர்களைத் தேடுவார் ஒருவருமில்லை. வண்டிகளைப் பூட்டினர். மாடுகளின் கழுத்தில் கட்டப் பட்டிருந்த சலங்கைகளையும் கழற்றி விட்டனர். எல்லோரும் வண்டியில் ஏறினுர்கள். இவர்கள் புறப்படுவதைப் பார்க்க ஊர் ஜனங்கள் கூடி விட்டனர். மாப்பிள்ளையை எங்கே என்று வேடிக்கை பார்ப்பவர்களில் ஒருவர் கேட்ட பிறகு தான் மாப்பிள்ளையைக் காணவில்லை யென்பது தெரிந்தது. வண்டியில் ஏறியவர்கள் மீண்டும் கீழே இறங்கினுர்கள். மாப்பிள்ளையை ஊரெங்கும் தேட ஆரம்பித்தனர். பெண்ணையும் காணவில்லை. மாப்பிள்ளையும் காணவில்லை. ஒருவேளை பெண்ணைத் தேடிக் கொண்டு தான் மாப்பிள்ளை போய் விட்டார் என்று சிலர் பரிகாசமாய்ப் பேசினர். ஒருவேளை, மானம் போய் விட்டதென்று கிணற்றில் வண்ணன் மனைவி விழுந்து விட்டதுபோல் விழுந்து விட்டாரோ எனச்சிலர் அனுமானித்தனர். மாப்பிள்ளை வீட்டார் வெளியூர்காரர் அல்லவா! பசி ஒரு பக்கம் வாட்டுகிறது. மானம் ஒரு பக்கம் மனத்தை வேதனைப் படுத்துகிறது. அதனுல் மேலும் தாமதிக்காமல், மாப்பிள்ளையையும் பறிகொடுத்து விட்டு ஊர் போய்ச் சேர்ந்தனர். அவர்களை எதிர் பார்த்துக் கொண்டிருந்த மாப்பிள்ளையும், வந்தவர்களைப் பார்த்து ஆவலோடு "பெண்ணைக் கண்டு பிடித்தார்களா" என்று தான் கேட்டாரே ஒழிய, தான் முகூர்த்த நாள் இரவில் 12 மணிக்குத் தன்னந்தனியாய் கால் நடையாக ஒருவருக்கும் சொல்லாமல் ஊர் வந்து சேர்ந்த கதையைச் சொல்லவில்லை. பெண்ணைக் காணவில்லை என்றதும் மாப்பிள்ளையை வந்து அடிக்கடி சிலர் பார்த்த வண்ணமாய் கிளியை வளர்த்துப் பூனைக்குக் கொடுத்த மாதிரி பாழுங்கிழவனுக்குப் பச்சைப் பசுங்கிளிபோன்ற வளைப் பணத்திற்கு ஆசைப்பட்டு

( 10-ம் பக்கம் பார்க்க !

# சிலப்பதிகாரம்

முரு. சேதுராமன், ஆவினிப்பட்டி.

கண்ணகியும் கோவலனும் பெருஞ் செல்வக் குடியிற் பிறந்தவர்கள். வளத்தகை வணிக வாழ்வினை உடையவர்கள். கோவலன் பெருமையைக் கூறுகின்றபோது,

"பெருநிலம் முழுதாளும் பெருமகன் தலைவைத்த
ஒருதனிக் குடிகளோடு உயர்ந்தோங்கு செல்வத்தான்!
வருநிதி பிறர்க் கார்த்தும் மாசாத்துவான் என்பான்
இருநிதிக் கிழவன்மகன் ஈரெட்டாண்டு அகவையான்!

அவனுந்தான்,

மண்தேய்த்த புகழினான் மதிமுக மடவார்தம்
பண்தேய்த்த மொழியினர் ஆயத்துப் பாராட்டிக்
கண்டேத்தும் செவ்வேளென்று இசைபோக்கிக் [காதலால்
கொண்டேத்தும் கிழமையான் கோவலன் என்பான் [மன்னோ!"

என்று சிறப்பிக்கின்றார் இளங்கோவடிகள்.

கதைக்கு நாயகியாகிய கண்ணகி கற்புடைச் செல்வி. குணநலமுடையாள்.

"நாகநீள் நகரொடு நாகநா டதனொடு
போகநீள் புகழ்மன்னும் புகார்நகர் அதுதன்னில்
மாகவான் நிகர்வண்கை மாநாய்கன் குலக்கொம்பர்
ஈகைவான் கொடியன்னாள்! ஈராண்டு அகவையாள்!

அவளுந்தான்,

போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்
தீதிலா வடமீனின் திறமிவள் திறமென்றும்
மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள் பெயர் மன்னும் கண்ணகி யென்பாள் [மன்னோ!"

இருவருக்கும் திருமணம் நிகழப்பெற்று இன்ப வாழ்வு வாழ்கின்றனர். கண்ணகியின் அழகில் ஈடுபட்டு இன்புற்ற கோவலன்,

"மாசறு பொன்னே வலம்புரிமுத்தே
காசறுவிரையே கரும்பே தேனே
அரும்பெறற் பாவாய் ஆருயிர் மருந்தே
பெருங்குடி வாணிகன் பெருமட மகளே
மலையிடைப் பிறவா மணியே என்கோ
அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ
யாழிடைப் பிறவா இசையே என்கோ!"

என்று அழகிய இனிய அருமை மொழிகளால் புகழ்ந்துரைத்து தீராக்காதல் செலுத்தி வாழ்ந்தான்.

சில ஆண்டுகள் செல்கின்றன. கண்ணகியின் ஒப்பற்ற அழகிலே லயித்த கோவலனின் உள்ளம், மாதவி என்னும் நடன மங்கையின் வடிவத்திலே படிகிறது.

துணைவனைப் பிரிந்த கண்ணகி எல்லை கடந்த துயரடைகிறாள். அவளது மையிருங்கூந்தல் நெய்யணி மறந்தது. "கொடுங்குழை துறந்து வடிந்து வீழ் காதினள்" என்று கூறுகின்றார் இளங்கோ. அவளது கொடுந்துயர் கவினுறச் சித்தரிக்கப்படுகிறது:—

"அஞ்செஞ் சீறடி அணிசிலம் பொழிய
மென்துகில் அல்குல் மேகலை நீங்கக்
கொங்கை முன்றில் குங்குமம் எழுதாள்
மங்கல அணியிற் பிறிதணி மகிழாள்
கொடுங்குழை துறந்து வடிந்து வீழ் காதினள்
திங்கள் வாள் முகம் சிறுவியர் பிரியச்
செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்பப்
பவள வாள்நுதல் திலகம் இழப்பத்
தவள வாள்நகை கோவலன் இழப்ப
மையிருங் கூந்தல் நெய்யணி மறப்பக்
கையறு நெஞ்சத்துக் கண்ணகி!"

காதலனைப் பிரிந்த கண்ணகியின் நலிவு பாட்டிலே சிறப்பாகத் தீட்டப்பட்டிருக்கிறது.

ஒருநாள் கடற்கரையில் மாதவி பாடிய வரிப்பாட்டு கோவலன் மனத்தை வருத்திட அவன் அவளை ஐயுற்றான். வெறுப்பு மிகுந்தது. உள்ளம் மாறுபட்டது. கண்ணகியை நண்ணினான். தனது செய்கைக்கு நாணினான். பொருளையே விரும்பும் பொது மாதிடம் கொண்ட பொய்யாய மையலால் பொருளை எல்லாம் அழித்ததற்கு வருந்தினான். கண்ணகி இன்ப மொழிகளால் கணவனின் கவலையை மாற்றினாள். மனைவியின் பெருந்தகைமை கோவலன் நெஞ்சத்தைக் குழைத்து வருத்தியது. தொலைத்த பொருளை மீட்டும் வாணிபம் செய்து ஈட்ட விழைந்து இருவரும் மதுரைக்கு ஏகுகிறார்கள். கல்லும் முள்ளும் நிறைந்த கானக வழியில், இரவும் பகலுமாக நடந்து செல்லும் கண்ணகிக்கும் கோவலனுக்கும் கவுந்தி அடிகள் என்ற புத்த சமயத் துறவி வழித்துணையாக அமைகிறார். இறுதியில் மதுரையை அடைகின்றனர். அங்கு மாதிரி என்னும் ஆயர்குல மங்கையிடம் கண்ணகி அடைக்கலமாக அளிக்கப்படுகின்றாள். கோவலன் கண்ணகியின் காற்சிலம்பை விற்று வரச் செல்லுகிறான். வழியிலே அரண்மனைப் பொற்கொல்லனைக் கண்டு சிலம்பின் விலையினைத் தீர்மானிக்க வேண்டுகிறான். பொற்கொல்லன் சிலம்பினை விலை மதிக்கவில்லை! தான் அரசியின் சிலம்பு திருடிய கள்வனாதலின் "கோவலனே கள்வன்!" என்பதை மன்னனிடம் பொருந்தக் கூறும் வழியையே மதித்தான். வன்னெஞ்சக் கொல்லன் மாசிலாக் கோவலனைத் திருடனாக்கினான். மன்னனிடம் சென்று,

"கன்னகம் இன்றியும் கவைக்கோல் இன்றியும்
துன்னிய மந்திரம் துணை எனக் கொண்டு
வாயிலாளரை மயக்குதுயில் உறுத்துக்
கோயிற் சிலம்பு கொண்ட கள்வன்
கல்லென் பேரூர்க் காவலர்க் கரந்து என்
சில்லைச் சிறுகுடில் அகத்து இருந்தோன்"

எனச் சொன்னான். அப்பொழுது அரசன் அந்தப்புறம் நோக்கி விரைந்து சென்றுகொண்டிருந்தான். ஆதலின் ஆராயவில்லை. நீதிமுறை தவறி,

வினை விளை காலமாதலின் யாவதும்
சினையலர் வேம்பன் தேரானாகி
ஊர்க் காப்பாளரைக் கூவி ஈங்குஎன்
தாழ்பூங் கோதை தன்கால் சிலம்பு
கன்றிய கள்வன் கையதாகில்
கொன்று அச்சிலம்பு கொணர்க ஈங்கு!"

எனப் பணித்து விட்டான்.

அரசன் ஆராயாது கூறும்போதுகூட "இக் கொல்லன் காட்டுகின்ற கள்வனைக் கொல்க!" எனக் கூறவில்லை. "அரசியின் சிலம்பு திருடன் கரத்திலிருப்பின் அவனைக் கொன்று சிலம்பினைக் கொணர்க!" என்றே கட்டளை இடுகிறான். இருப்பினும் விதி செய்த சதியால் கோவலன் கொல்லப்படுகிறான்.

[தொடரும்]

## பர்மாவில் புதிய பாலம்

யுத்தத்தால் பாதிக்கப்பட்ட பர்மாவின்சீர்திருத்தத்தில்முக்கிய பங்கெடுத்துக் கொண்டு வேலை புரியும் வங்காள சாப்பர் மைனர் படையைச் சேர்ந்தவர்கள் மைடிஞ்சி நதியில், ரங்கூன் மாண்டலே ரஸ்தாவையும், ரயில்வேயையும் இணைப்பதற்காக ஓர் நிரந்தர பாலத்தைக் கட்டி வருகின்றனர். 1945ல் ஜப்பானிய உள்ளீடின் போது முன்பு இருந்த பாலம் அழிக்கப்பட்டது. ஓர் தற்காலிக பெய்லி பாலம், ராயல் இந்திய இன்ஜீனியர்களால் அமைக்கப்பட்டது. பருவ காலம் ஆரம்பித்தவுடன் ஓர் நிரந்தர பாலத்தைக் கட்ட தீர்மானிக்கப்பட்டது. தண்ணீருக்குள் மூழ்கும் மூடிகளாக புகை மூடிகளை உபயோகித்து 75 வது முன்னணி கம்பெனி, வங்காள சாப்பர் மைனர் படையைச் சேர்ந்தவர்கள் 30- அடி தூரம் வரை மூழ்கும் தூண்களை நடுவதற்காக இடத்தை ஆராய்ந்தனர். ஜூன் மாதக் கடைசிக்குள்ளாக கான்கிரீட் தூண்கள் பாலத்தைத் தாங்க தயாராயிருந்தன. இதற்கிடையில் 321 வது இந்திய ரயில்வே பிரிட்ஜிங் கம்பெனியும் பம்பாய் சாப்பர் மைனர் படையைச் சேர்ந்த 305-வது முன்னணி பார்க் கம்பெனியும் தூண்களுக்கிடையில் பொருத்தப்பட வேண்டிய எஃகுத் தகடுகள் தயாரித்தன. இப்பாலத்தை அமைக்க அநேக கடினமான வேலைகளும் திட்டங்களும் கையாளப்பட்டன. இது முடிவு பெறும்போது பர்மா சீர்திருத்தத்தில் மற்றொரு பெரும் கைங்கரியமாக இருக்கும்.

### தேங்காய் விலைக் கட்டுப்பாடு

தேங்காய், தேங்காய் எண்ணெய் தயாரிப்புகளின் விலை நாளுக்குநாள் அதிகரிப்பதைக் குறித்து, மாகாண சர்க்கார் விலைகளைக் கட்டுப்படுத்துவது சாத்தியமில்லையெனவும் விலைகளைக் குறைப்பதற்காக தேங்காய் இறக்குமதி பற்றி ஆலோசித்தது மத்திய சர்க்காரேயன்றி சென்னை சர்க்கார் அல்லவென்றும், திருவாங்கூர், கொச்சியைப் பாதிக்காமல் சென்னை மாகாணத்தில் நியாயமான எல்லைக்குள் விலைகளைக் கொண்டுவர தீவிர நடவடிக்கை யெதுவும் எடுக்க முடியாதெனவும் சென்னை உணவு மந்திரி அறிவிக்கிறார்.

### நாச்சியாபுரம்

இவ்வூர் கிராம காங்கிரஸ் கமிட்டியின் சார்பாக ஆகஸ்ட் தினத்தையொட்டி 14-8-46- மாலை 7 மணிக்கு தேவகோட்டை திரு. ராம. அண்ணாமலை அவர்கள் தலைமையில்ஓர்பொதுக் கூட்டம் நடைபெற்றது. அக்கூட்டத்தில் நெற்குப்பை நா.லெட்சுமணன், குன்னக்குடி தங்கவேலன், காரைக்குடி பழனியப்பன், கருப்பையா, நாச்சியாபுரம் மெ. ஆதினமிளகி முதலியோர் ஆகஸ்ட் தினப் போராட்டத்தைப் பற்றியும் இ. தே. ராணுவத்தின் சேவையைப் பற்றியும், கம்யூனிஸ்ட் கொள்கைகளைக் கண்டித்தும் விரிவாகப் பேசினார்கள். பின்னர் பூரண சுதந்திரத்தையடைய காங்கிரஸ் மகா சபை நடத்தும், எவ்விதப் போராட்டத்திலும், தயங்காது ஈடுபடுவதாகக் கூட்டம் சபதம் எடுத்துக் கொள்கிறது என்ற தீர்மானத்துடன் இரவு 10-30 மணிக்கு கூட்டம் இனிது முடிவெய்தியது.

## புது டில்லியில் சர் அழகப்ப செட்டியாருக்கு உபசாரம்

புதுடில்லி தென்னிந்திய சங்கத்தார் டாக்டர் சர் அழகப்ப செட்டியாருக்கு சமீபத்தில் ஒரு வரவேற்பளித்தார்கள். உபசாரத்திற்குப் பதிலளிக்கையில் டாக்டர் அழகப்ப செட்டியாரவர்கள் தென்னிந்தியர் தொலை தூரத்திலுள்ள இந்தியத் தலைநகருக்கு வந்து சாதித்துள்ள அரிய சேவைகளைப் பாராட்டி தென்னிந்திய வாலிபர்கள் தங்கள் கவனத்தையும் காலத்தையும் சமூக சேவையிலும் ஏழைகளைக் கைதூக்கி விடுவதிலும் செலவிடவேண்டுமென்றும், பொதுஜன நன்மைக்காக தம்மாலானவரை பாடுபட்டு உழைப்பதுபோல் வேறெதுவும் தமக்கு ஆனந்தத்தை அளித்ததில்லை என்றும் தென்னிந்தியர் சங்கக் கட்டிடத்துக்குத் தம்மாலான உதவியைச் செய்வதாகவும் பேசினார்.

### கள் குடிப்பதில்லையென பிரதிக்ஞை

சிவகெங்கை தாலுக்கா மானாகுடி காளைமேய்க்கி என்ற இரண்டு கிராமங்களிலும் உள்ள விவசாயிகள் மதுபானம் அருந்துவதில்லை என்றும் அவ்வூர் ஹரிஜனங்கள் மதுபானமும் மாட்டிறைச்சியும் சாப்பிடுவதில்லையென்றும் தேசியக்கொடியின் கீழ் நின்று பிரதிக்ஞை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் எனத் தெரிகிறது.

### கிராம உணவுக் கமிட்டிகள்

கிராம உணவுக் கமிட்டிகள் பூரண பிரதிநிதித்துவம் வாய்ந்ததாக இல்லை. அல்லது சில குறிப்பிட்ட கட்சிகளுக்கு அவைகளில் அதிகமாகப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டிருக்கிறதென்று சர்க்காருக்குப் புகார்கள் வந்திருக்கின்றன. இனி மேலும் தாமதமில்லாமல் இந்தக் கமிட்டிகள் மாகாண முழுவதும் வேலையை ஆரம்பிக்க வேண்டிய ஏற்பாடுகளை முடிவானதாகச் செய்யவேண்டியது அவசியமாக இருக்கிறது. ஆகவே கிராம உணவுக் கமிட்டிகள் பற்றி ஆகஸ்ட் 28-உ-க்குப் பின்னர் செய்யப்படும் புகார்களை ஏற்பதில்லையென முடிவு செய்யப்பட்டிருக்கிறது. அந்தத் தேதிக்குள் சர்க்காருக்குக் கிடைக்கும் புகார்கள் பிரிக்கப்பட்டு ஜில்லா வாரியாக வகுக்கப்படும். செப்டம்பர் 10-உக்குள்ளாகக் கூடிய சீக்கிரத்தில் தீர்க்கப் பல்வேறு ஜில்லாக்களுக்குச் சென்று பார்வையிடுமாறு பார்லிமெண்டரி காரியதரிசிகளுக்கு உத்தரவிடப்படும். செப்டம்பர் மாதத்திற்குள் மாகாண முழுவதற்கும் ஜில்லா தாலுகாக் கமிட்டிகள் அமைப்பு முடிவதற்காக மேற்கொண்டு நடத்தப்படவேண்டிய தேர்தல்கள் பின்னர் முடிக்கப்படலாம்.

### கடியாபட்டி

இவ்வூர் ஸ்ரீபூமீஸ்வர உயர்தரப் பள்ளியில் பறந்து கொண்டிருந்த தேசிய மூவர்ணக்கொடி திடீரென்று காணப்படவில்லை. மீண்டும் தேசியக் கொடியைப் பறக்கவிட சில மாணவர்கள் முயற்சித்தும் ஆசிரியர்கள் அனுமதி மறுத்து விட்டார்கள் என்று சொல்லப்படுகிறது. இதன் காரணமாக மாணவர்கள் பள்ளிக்கு முன்னால் நின்று ஹர்த்தால் செய்தார்கள். பிறகு சமரசம் செய்யப்பட்டு மீண்டும் கொடியேற்றப்பட்டது.

தமிழ் மொழி வாழ்க

## தென் ஆப்பிரிக்காவில் இந்தியர்கள் நிலைமை

டாக்டர் பிரகாஷ் சந்திரா என்பவர் "கல்கத்தா ரிவியூ" என்ற பத்திரிகையில் கீழ்க்கண்டவாறு எழுதுகிறார்:—

உலகில் தென் ஆப்பிரிக்கா தவிர வேறு எந்தப் பாகத்திலும் நிறவேற்றுமை அவ்வளவாகக் காணப்படவில்லை; வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் நிற வித்தியாசம் என்பது அதிகமாகக் காணப்படுகிறது. ஐரோப்பியர்கள் ஆசியாக்காரர்கள், நீக்ரோக்கள் முதலியவர்கள் மிகச் சமீபத்திலேயே வசித்தாலும் அவர்கள் எந்த விஷயத்திலும் ஒற்றுமைப்படுவதில்லை — ஏன் — அவர்களுக்குள் உள்ள வித்தியாசங்களோ ஏராளம். ஜனத்தொகை சுமார் 10·5 மிலியன். இதில் நூற்றுக்கு 70 பேர் நீக்ரோக்கள்; நூற்றுக்கு 21 பேர் ஐரோப்பியர்கள்; நூற்றுக்கு 2·5 விதம் இந்தியர்கள். அங்குள்ள இந்தியர்களின் மொத்த ஜனத்தொகை 2, 10, 000 ஆகும்.

ஐரோப்பியருக்கும் ஐரோப்பியரல்லாதார்க்கும் இடையில் பெரிய தோர் பிளவு காணப்படுகிறது. ஐரோப்பியர்களுக்கு அனேக சமூக உரிமைகளும், சமூக நன்மைகளும், கல்வி வசதிகளும் அளிக்கப்படுகின்றன; மற்றவர்களுக்கு அவைகள் மறுக்கப்படுகின்றன. ஐரோப்பியர்கள் கைகளில் அரசியல் அதிகாரங்களெல்லாம் இருக்கின்றன; இந்தியர்களுக்குச் சில அடிப்படையான சமூக உரிமைகள்கூட அளிக்கப்படவில்லை என்பது பரிதாபம்! தென் ஆப்ரிக்காவில் உள்ள இந்தியர்களுக்கு வாழ்வதற்குக்கூட நிலமில்லை; அவர்கள் தேர்தல்களில் ஓட்டுப்போட முடியாது. அவர்கள் சில ஒதுக்கப்பட்ட பிரதேசங்களில்தான் வசிக்கலாம். குறிப்பிட்ட அளவுக்குமேல் சொத்துக்கள் வைத்துக்கொள்ளக் கூடாது. அவர்களுடைய குழந்தைகள் சாதாரண ஆப்பிரிக்க பள்ளிக்கூடங்களை எட்டிக்கூடப் பார்க்கக் கூடாது. பல தலைமுறையாக அங்கு வாழ்ந்தும் அவர்கள் அந்ததேசத்து மக்களாகக் கருதப்படுவதில்லை.

இந்தியர்களின் நிலைமை அங்குள்ள மாகாணங்களில் பின்வருமாறு.- நேட்டாலில் முக்கால்வாசிக்கு மேற்பட்டவர்கள் வசிக்கிறார்கள்; அவர்களுக்கு முனிசிபல் மாகாணம் சம்பந்தமான ஓட்டுரிமைகள் கிடையாது. டிரான்ஸ்வால் மாகாணத்திலும் இவ்வாறே. கேப் காலனியில் முனிசிபாலிட்டியில் மாத்திரம் ஓரே ஒரு ஸ்தானம் இந்தியருக்கு உண்டு. பார்லிமெண்ட் சபைக்கு இந்தியர்களுக்கு ஓட்டுரிமை கிடையாது. ஓட்டர்கள் பிறவியில் ஐரோப்பியர்களாயும் பிரிட்டிஷ் பிரஜைகளாயும் இருக்கவேண்டுமென்று அங்குள்ள விதிகள் தெளிவாகக் கூறுகின்றன. சர்க்காருக்கு வரி கொடுப்பதில் இந்தியருக்கும் பங்கு உண்டு; ஓட்டுரிமையில் இந்தியருக்குப் பங்கு கிடையாது. இது எவ்வளவு கொடிய அநீதி!

அரசியல் உரிமைகள் இல்லாமல் இருப்பது தவிர, பொருளாதாரத் துறையிலும் இந்தியர்கள் முன்னேறா வண்ணம் அமுக்கி வைக்கப்படுகிறார்கள். சமீபத்தில் ஏற்பட்டுள்ள இரண்டு சட்டங்களைக் கூறலாம். ஒன்று ஆசியாக்காரர்களுக்கு ஆப்பிரிக்க நிலத்தில் உள்ள பாத்தியதை சம்பந்தமானது. மற்றொன்று இந்திய பிரஜா உரிமைச் சட்டம். மேற்கூறப்பட்ட சட்டம் 1946 மார்ச்சோடு முடிகிற முடக்கல் சட்டத்திற்குப் பதிலாக ஏற்பட்டது. முடக்கல் சட்டமாவது டர்பன்வரையில்தான் அமுலில் இருந்தது. புதிய சட்டத்தின் பிரகாரம் நெட்டால் டிரான்ஸ்வால் முதலிய பிரதேசங்களில் இந்தியர்கள் சொத்துக்கள் வாங்கக்கூடாது. வாங்குவதாய் இருந்தால் அவர்களுக்கென்று தனியே ஒதுக்கப்பட்டிருக்கும் இடங்களில்தான் வாங்கவேண்டும். இச்சட்டத்தால் உண்டாகும் சமூகச் சீர்கேடுகளைத் தவிர, பொருளாதாரச் சங்கடங்களும் இந்தியர்களுக்கு ஏராளமாக உண்டாகும். இந்தியர்கள் நகரங்கள், பட்டணங்கள் முதலியவைகளின் வெளிப்பாகத்தில் ஒதுக்கப்பட்ட தனி இடங்களில் குடியிருந்தால் அவர்களுக்கும் மற்ற ஜனங்களுக்கும் அதிக சம்பந்தமிராதே! அப்படியானால் அவர்கள் தொழில், வியாபாரம் முதலியவைகள் கெட்டுவிடுமன்றோ? ஆக புதிய சட்டமானது இந்தியரின் பிழைப்பில் மண்ணை அள்ளிப்போட முயற்சிக்கிறது.

ஜீவாதாரமான மேற்கூறிய உரிமைகளைப் பறித்தபின் புதுச்சட்டம் இந்தியருக்குச் சில ஓட்டுரிமைகளை அளிப்பதாகக் கூறுகிறது. அவைகள் உண்மையில் உரிமைகளல்ல;ஏமாற்று வித்தைதான். உதாரணமாக ஓட்டர் ஜாபிதாவை எடுத்துக் கொண்டால் இந்தியருக்குத் தனி ஓட்டர் ஜாபிதா ஐரோப்பியருக்குத் தனி. இந்தியர்கள் ஓட்டுப் போடலாம், எலெக்ஷனுக்கு நிற்கக் கூடாது. அவர்கள் தங்கள் பிரதிநிதிகளாக ஐரோப்பியர்களை அனுப்பலாம்.

பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் இந்தியா இருந்துங்கூட இந்தியர்களிடம் நிறத்துவேஷங் காட்டப்படுகிறது. சில காலனிகள் வருஷா வருஷம் ஆயிரக்கணக்கான பேர்களைக் குடியேற்றி தங்களை விருத்தி செய்து கொள்ளப் பார்க்கின்றன. ஆனால் குடியேறுபவர்கள் அசல் ஐரோப்பியர்களாக இருக்க வேண்டுமாம். இந்தியர், சீனர் முதலிய ஆசியாக்காரர் கூடாதாம். தென் ஆப்ரிக்காவில் தான் நிறபேதம் உச்ச ஸ்தானத்தில் காணப்படுகிறது.

புதிய சட்டத்தின் காரணங்களை ஆராய்வோம். கறுப்பு ஜனங்களைக் கடந்த இரண்டு நூற்றாண்டுகளாக வெற்றிகரமாக நாம் ஆண்டிருக்கிறோம் என்று வெள்ளையர்கள் இறுமாப்படைந்திருக்கிறார்கள். அந்தக் கர்வமே ஆப்பிரிக்காவில் காணப்படுகிறது. இரண்டாவது பொருளாதாரக் காரணம். ஆப்பிரிக்காவில் செழிப்பான கரைப்பிரதேசங்களில் தேயிலை, கரும்பு, பழங்கள் முதலிய தோட்டங்கள் ஏராளமாக அமைக்க இந்தியர்கள் தேவையாக இருந்தது. ஆயிரக்கணக்கான இந்தியர் அங்கு குடியேறிப் பாடுபட்டு உழைத்தனர். அவர்கள் உழைப்பின் பலனாக ஏராள ஐசுவரியத்தை ஆங்கிலப் பிரபுக்கள் அடைந்தனர். செட்டும் கட்டுமாயுள்ள இந்தியர்கள் சிலர் சிறிது பொருள் சேர்த்து சிறிது சொத்துக்களை வாங்க ஆரம்பித்ததும், விழித்தனர் வெள்ளையர். இம் முன்னேற்றத்தை முளையிலேயே கிள்ளி யெறிய விரும்பினர். அதன் பலனாக, முடக்கல் சட்டம், புதிய சட்டம் முதலியவை முளைத்தெழுந்தன.

தென் ஆப்பிரிக்காவிலுள்ள இந்திய சமூகம் புதிய சட்டத்தைக் கண்டு கவலை கொள்ளுகிறது. சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதைத் தடுக்க தன்னாலியன்றவரை பாடுபடுகிறது. தென் ஆப்பிரிக்க இந்தியரின் முயற்சிக்கு இந்தியாவில் உள்ள சகல கக்ஷிகளின் பூரண ஆதரவும் இருக்கிறது. இதைக்காண சில ஆப்பிரிக்கப் பத்திரிகைகள் சீற்றங் கொள்ளுகின்றன. எப்படியும் சீக்கிரத்தில் இந்தியா சுதந்திரமடையும். அப்படியாகும் பொழுது தன் தேச மக்கள் மற்றோர் அன்னிய நாட்டில் அநியாயமாக நடத்தப் படுவதை சும்மா பார்த்துக் கொண்டிராது.

இந்திய சர்க்கார் இறுதிச் செயலாக தென் ஆப்பிரிக்காவோடு வியாபார ஒப்பந்தங்கள் முதலியவைகளை நிறுத்திக் கொண்டதாக அறிவித்திருக்கிறார்கள். இன்னும் ஓரே ஒரு வழிதான் இருக்கிறது. அதுதான ஐக்கிய நாடுகளிற் ஸ்தாபனத்திற்கு வேண்டுகோள் அனுப்புதல்.

தென் ஆப்பிரிக்கா இந்தியர் விரும்பும் உரிமைகள் எந்த ஜனநாயக நாட்டிலும் சாதாரணமாக மக்கள் விரும்பக்கூடிய ஆரம்ப உரிமைகள். அவர்கள் வேண்டுவது உண்மையான பிரஜா உரிமைகள், மாகாணத் தடைகள், நிறத்தடைகள் முதலியவைகளையகற்றி எங்கு வேண்டுமானாலும் வசிக்கவும், தொழில் செய்யவும், சொத்துக்கள் முதலியவை வாங்கவும் உரிமைகள் வேண்டு மென்பதுவே.

குமரன்

மகளிர் இல்லம்
வியவரு ஆவணி மீ 6உ

## கல்கத்தா துயரம்

நிகழ்ந்த சில தினங்களில் கல்கத்தாவிலேற்பட்ட அபாயகரமான கலவரம் மக்களைத் திடுக்கிடச் செய்கிறது. பதினுயிரம் பேரை ஆஸ்பத்திரியிர் சேர்க்க வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது. இரண்டாயிரம் பேர் இறந்தே போயினர். வைத்திய சாலை படுக்கைக்குப் போக வேண்டிய அளவுக்குக் குறைந்து அடிபட்டவர்களும் காயம் பட்டவர்களும் எத்தனை ஆயிரமோ! கவர்னரும் மந்திரி சபையும் இருக்கிற மாகாணத் தலைநகரில் கட்டுக் கடங்காமல் ஒரு கூட்டம் ஏகபோக கலக ராஜ்யத்தைத் தொடர்ந்து நடத்தியிருக்கிறது. எதாவது கண்டிப்பதற்கு மேலே அரசாங்கம் இருக்கிறது என்று நினைத்தால் இவ்வளவு துணிச்சலாக நடவடிக்கைகள் நடந்திருக்க முடியாது. மேலே யிருக்கிற அரசாங்கம் தங்களுக்குச் சாதகமாக இருக்கிறதென்று நினைத்திருக்க வேண்டும். அல்லாவிட்டாலும் தங்கள் செயலைக் கண்டித்து நிறுத்த மாட்டாது என்ற நம்பிக்கை இருந்திருக்க வேண்டும். மந்திரி சபை பகிரங்கமாகப் பொது விடுமுறையென்று வெளியிட்டது கலகக் கூட்டத்தின் வாலை முறுக்கி விட்டது போல் ஆய் விட்டது போலும்! அரசியல் கொள்கைகள் எப்படியிருந்த போதிலும் தங்கள் கட்சிக்கார பொது ஜனங்களை உற்சாகப்படுத்த வேண்டியதவசியமாய் இருந்த போதிலும் மந்திரி சபை அந்த மாகாணத்தின் முழு ஜனத் தொகைக்கும் பொறுப்புடையது என்று உணரப்படவேண்டும்.

புதிய ராஜ்யாபதி இந்த ஆட்சியம் நடப்பதற்கு அங்கு ஒரு அரசாங்கம் இல்லையா என்று கேட்கிறார். கலகம் செய்தவர்களும் அரசாங்கம் இருக்கிறதென்று பயப்படவில்லை. தாக்கப்பட்ட ஜனங்கள் அரசாங்கம் நடக்கிறதென்று நினைத்து ஏமாந்து போய்விட்டனர். எனவே கலகம் நடந்த சில தினங்களில் அரசாங்கம் அங்கே செல்லாக் காசாக இருந்திருக்கிறதென்று நினைப்பது மிகையல்ல.

சுமார் பதினுயிரம்பேர் சாயப் படவேண்டுமென்றால் இரண்டாயிரம் பேர் சாகவேண்டுமென்றால் கலகம் எவ்வளவு தூரம் நடந்திருக்கிறதென்று ஊகிக்கலாம். கலகக்காரர்களுக்குப் பின்னால் ஒரு பலமான தூண் இருக்கிறதென்று கருதாமல் முடியாது. ஸிகர்கள் கலகம் செய்த தாக்கிக்கொல்ல வங்காளம் வைத்தியர்க்குமானுல், அவர்கள் தாக்கப்பட்டு சாவதற்கு அந்த மாகாணமே அல்லது அந்த மாகாணங்கிலோ தயாராகவிட்டா வென்று யாரால் சொல்ல முடியும்? இப்படிப்பட்ட அறிவுக்கலப்பற்ற ஒழுங்கீனமான பலாத்காரத்தில் தலையிட முற்படுவது வந்த வழியிலும் நன்மை தாக்கூடியதல்ல. சில தலைவர்கள் இந்த கலகத்தில் சம்பந்தப் பட்டிருந்தாலும், படாவிட்டாலும் சரியானபடி விசாரணை செய்து தக்க பரிகாரம் தேட வகைசெய்ய படவேண்டும். அன்னிய நாட்டிலிருந்து விடுபட வேண்டுமென்று கருதுகிற இந்த சமயத்தில் உள் நாட்டில் கூடத் தனமான கலகங்கள் நடக்கும்படி இடங்கொடுப்பது மண்ணைவாரித் தலையிலே போட்டுக் கொள்வதைத் தவிர வேறில்லை. கல்கத்தாவில் நடந்த இந்த கலகமும் அதன் அடிப்படை காரணங்களும் இதோடு ஒழியுமானல் தேசத்திற்கும் தேசமக்களுக்கும் நல்லகாலமாக இருக்கும்.

---

## காரைக்குடி

### சட்ட மந்திரி விஜயம்

சென்னை சட்ட மந்திரி திரு கே. பாஷ்யம் ஆகஸ்ட் 28உ காலை மகர் நோன்பு அக்ரகாரத்தில் க்ஷயரோக ஆஸ்பத்திரியைத் திறந்து வைப்பார்.

### ஆண்டுவிழா

சிவ நேசர் திருக்கூட்டத்தின் 23 வது ஆண்டுவிழா ஆவணித்திங்கள் 14, 15ஆம் நாட்களில் ஸ்ரீமீனுட்சி சுந்தரேஸ்வரர் உயர்தரப் பள்ளியில் திரு. ஈசான சிவாசாரிய சுவாமிகள் தலைமையில் நடைபெறும்.

### கதிரேசன் கழகம்

கதிரேசன் கழக மூன்ருவது ஆண்டு நிறைவுவிழா, ஸ்ரீமீனுட்சி சுந்தரேசுவர உயர்தரப்பள்ளியில் புரட்டாசி 1உ ஞாயிற்றுக்கிழமை காலை மாலை இருவேளையிலும், சைவசித்தாந்தப் பேராசிரியரும், தமிழறிஞருமான உயர்திரு ச. சச்சிதானந்தம்பிள்ளை B. A: L T. அவர்கள் தலைமையில் நடைபெறும்.

---

### சொற்பொழிவு

சிவகங்கை சோமலே இலவச வாசகசாலையில் ஆகஸ்ட் 25உ ஞாயிற்றுக்கிழமை மாலை 5மணிக்கு அபராஞ்சி புகார் திருவாளர் ராய. சொக்கலிங்கன் அவர்கள் கவிச்சக்கரவர்த்தி என்னும் பொருள் பற்றி ஒரு சொற்பொழிவாற்றுவார்.

---

### உத்தியோக மாற்றம்

ராவ்பகதூர் பி. ராமதாஸ் ராமநாதபுரம் ஜில்லாக் கலெக்டராக மாற்றப் பட்டிருக்கிறார்.

திரு. சி. கணபதி பிள்ளை தேவகோட்டை நகரசபைக் கமிஷனராக மாற்றப்பட்டிருக்கிறார்.

---

### பிரசவ சிசு சம்ரக்ஷணசாலை திறப்பு விழா

சென்னை சட்டமந்திரி திரு. கே. பாஷ்யம் தேவகோட்டை நகரில் புதிதாகக் கட்டப்பட்டுள்ள "சுந்தரி மணி" பிரசவ சிசுசம்ரக்ஷணசாலையை ஆகஸ்ட் 27ந் தேதி மாலை திறந்து வைப்பார். அன்று மாலை 4மணிக்கு தேவகோட்டை வக்கீல் சங்கத்தில் திரு. சட்டமந்திரிக்கு ஒரு வரவேற்பளிக்கப்படும்.

---

### ரயில்வே வேலை நிறுத்தம்

தென்னிந்திய ரயில்வேத் தொழிலாளர்களுக்கும் நிர்வாகிகளுக்கும் இடையே சமரசத்தை உண்டுபண்ண எடுத்துக் கொண்ட முயற்சி யனைத்தும் தோல்வி யுற்றது. தென்னிந்திய ரயில்வேயில் உள்ள எல்லாப் பகுதிகளிலும் ஆகஸ்ட் 24ந்தேதி நள்ளிரவு முதல் வேலை நிறுத்தம் ஆரம்பமாகும். 24ந்தேதிக்குள் முடிவு பெருத எந்த பிரயாணத்தையும் பொது மக்கள் மேற்கொள்ள வேண்டாமென்று ரயில்வேத் தொழிலாளர் சங்கத் தலைவர் திரு. வி. கல்யாண சுந்தரம் அறிவிக்கிறார். இத்தொழிலாளர்களில் காங்கிரஸ் தொழிலாளர் சங்கத்தார் இவ்வேலை நிறுத்தத்தில் சேரக்கூடாதென்று தீர்மானம் செய்திருக்கிறார்கள்.

---

## சுபாஷ் போஸ் வெளிவருவார்?

ஆசாத் ஹிந்த் சர்க்கார் ஞாபகார்த்தமாக அக்டோபர் 21-ந் தேதி கொண்டாட்டம் நடக்குமென்றும் அப்போது திரு சுபாஷ்சந்திரபோஸ் பகிரங்கமாக வெளிவருவாரென்று அகைாபாத் பகுதியில் நம்பிக்கை நிலவுவதாக ஒரு செய்தி கூறுகிறது.

---

### ஜில்லா காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசின் சுற்றறிக்கை

சமீபத்தில் நடைபெறப்போகும் ஸ்தல ஸ்தாபனத் தேர்தல்களில் காங்கிரஸ் சார்பில் கைப்பற்றவேண்டுமா வேண்டாமா என்று உடனே கமிட்டிகளின் அபிப்பிராயத்தை தெரிவிக்குமாறு ராமநாதபுரம் ஜில்லாக் காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி திரு கே. எஸ் முத்துச்சாமி எல்லாப் பிரதம காங்கிரஸ் கமிட்டிகளுக்கும் ஒரு சுற்றறிக்கை விட்டிருக்கிறார்.

---

### சிவகங்கைக்குப் புது திவான்

திரு என். வைத்திநாதய்யர் சிவகங்கைக்குத் திவானுக நியமனம் செய்யப்பட்டு ஆகஸ்ட் 14-ந் தேதியில் பதவி ஏற்றுக்கொண்டார்.

---

### புதுக்கோட்டை அச்சுத் தொழிலாளர் சங்கம்

இச்சங்கத்தின் மூன்ருவது கூட்டம் அணிகலம் ஆசிரியர் திரு. எல் கதிரேசன் செட்டியார் தலைமையில் நடைபெற்றது. திரு. முருகு சுப்பிரமணியமும் திரு. டி. வ. நடராஜ பிள்ளையும் திரு. சின்னத்தம்பியும் பேசினார்கள்.

---

### "பாலகவி"

புதுக்கோட்டை அரசாங்கத்தார் இவ்வாண்டு நவராத்திரியில் நடைபெறும் தமிழ் பரிக்ஷை சபைக்கு அங்கத்தினராகவும் பரீக்ஷகராகவும் தேவகோட்டை தருமபுர ஆதீன வித்துவான் பாலகவி வே. இராமநாதன் செட்டியாரவர்களை நியமித்துள்ளார்கள்.

---

### இராமநாதபுரம் ஜில்லாக் காங்கிரஸ் கமிட்டி

பாமைதரையில் ஜில்லா காங்கிரஸ் கமிட்டிக் காரியாலயத்தில் கமிட்டிக் கூட்டம் கூடியது. சமீபத்தில் ராமநாதபுரம் எக்ககுடி ஆகிய பிரதேசங்களில் நடைபெற்ற வகுப்பு வாத சச்சரவை விசாரிக்க ஐவர் கொண்ட கமிட்டி யொன்று நியமிக்கப்பட்டது. 1942 ஆகஸ்ட் இயக்கக் கலவரத்தின் போது அத்துமீறி நடந்து கொண்ட அதிகாரிகள் மீது தக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று மீண்டும் கேட்டுக் கொள்வதென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

---

### லோகோபகாரி பொன்விழா

சென்னையினின்று வெளியாகும் தமிழ் வாரப் பத்திரிகையாகிய லோகோபகாரியின் பொன் விழா ஆகஸ்ட் 17-ந் தேதி வி. பி. ஹாலில் கொண்டாடப்பட்டது. "சுதேசமித்திரன்" ஆசிரியர் திரு சி. ஆர். சீனிவாசன் தலைமை வகித்தார். திரு வி. கல்யாணசுந்தர முதலியார், திருமதி அம்மு சாமிநாதன், மந்திரி எம். பக்தவத்சலம், பி. ஸ்ரீ. ஆச்சாரியார் முதலிய பலர் பத்திரிகை செய்துள்ள சேவையைப் பாராட்டிப் பேசினர்கள். பத்திரிகையின் ஆசிரியர் திரு பூங்காவனம் நன்றி கூறினர்.

---

## வேலை நிறுத்தங்கள் காந்திஜியின் உபதேசம்

தொழிலாளரும் மாணவரும் எல்லோரும் அடிக்கடி பொதுவேலை நிறுத்தஞ் செய்வதனுல் தேசத்தில் ஏற்பட்டுள்ள நிலைமைபற்றியும் ஒழுங்கீனத்தைப் பற்றியும் காந்திஜியும் இதர காங்கிரஸ் தலைவர்களும் தீவிரமாகச் சிந்தனை செய்துவருகிருர்கள். தேசத்தில் பலாத்காரமும் ஒழுங்கீனமும் பத்திரமின்மையும் தலை தூக்கியிருப்பதாகவும் இதனுல் ஏற்பட்டுள்ள கேவலநிலை முற்று முன்பு இதனைத் துரிதமாகச் சமாளிக்க நடவடிக்கை எடுக்கப்பட வேண்டுமென்றும் மகாத்மாஜி கருதுகிறார். சமாசத்திற்கான சகல முறைகளிம் கையாண்டு பார்க்கப்படுமுன்பே வேலை நிறுத்தங்கள் மேற்கொள்ளப் படுவதாகத் தலைவர்கள் கருதுகின்றனர்.

தற்சமயம் எல்லா மாகாணங்களிலும் ஜனங்களால் தெரிந்தெடுக்கப்பட்ட மந்திரிகள் இருக்கின்றனர். இவர்களை அதிகார பதவியில் வைத்ததற்கான பொறுப்பில் தொழிலாளருக்கும் பங்கு இருந்திருக்கிறது. தொழிலாளர்களின் எந்த நியாயமான குறையையும் மந்திரிகள் அனுதாபத்துடன் சிந்தித்துப் பார்ப்பார்களென்று எதிர் பார்க்கமுடியும். அவர்கள் மத்தியசர்க்கார், மாகாண சர்க்கார், அல்லது பிரைவேட் முதலாளிகள் இவர்களுக்குத் தொழிலாளரின் கோரிக்கைகளைத் திருப்தி செய்யத்தக்க நடவடிக்கை எடுக்கும்படி ஆலோசனைகள் கூறக்கூடிய சிறந்த நிலையில் இருக்கிருர்கள். மத்திய சர்க்காரின் கீழுள்ள ஊழியர்களும் தங்களது கட்சியை மாகாண மந்திரிகளின் ஆலோசனைக்காக அனுப்பவேண்டும். ஏனெனில் மத்திய சர்க்கார் ஊழியர்களது வேலை நிறுத்தம் மத்திய சர்க்காரைப் பாதிக்கும் நோக்கத்துடன் கூடியதாக இருப்பினும் அதனுல் கஷ்டப்படுகிறவர்கள் மாகாண நிர்வாகங்களும் மாகாண மக்களுமாக இருக்கின்றனர். ஜனப்பிரதிநிதிகளான மந்திரிகள் தங்களால் எதுவும் செய்ய இயலாதென்று ஒப்புக்கொண்டு தொழிலாளரே தங்களிஷ்டப்படி அவர்களது தகராறைத் தீர்த்துக்கொள்ளுமாறு விட்டுவிடும்படியான நிலையில்தான் வேலை நிறுத்தங்கள் மேற்கொள்ளப்பட வேண்டுமென்று காந்திஜி அபிப்பிராயப்படுகிருர்.

---

### கல்கத்தாவில் அமளி

முஸ்லீம்களின் "நேரடி நடவடிக்கை தினம்" காரணமாக கல்கத்தாவில் ஆகஸ்ட் 16-ந் தேதி வகுப்புக் கலவரம் ஏற்பட்டு ரணகளமாக மாறியது. தாக்குதல்கள், கத்திக் குத்துகள், தடியடி சண்டைகள் முதலிய யாவும் தாண்டவமாடின. கடைகள் சூறையாடப்பட்டன. தீவைக்கப்பட்டன. பெண்கள் கற்பழிக்கப்பட்டார்கள். ராணுவம் தருவிக்கப்பட்டது. ஊரடங்குச் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். காங்கிரஸ் ஆபீஸ்களும் ஹிந்துக் கோவில்களும் தாக்கப்பட்டன. ஒரு கோடிக்கு மேல் சேதம் ஏற்பட்டிருக்குமெனத் தெரிகிறது. 2000-க்கு மேல் மாண்டிருப்பரென்றும் 8-000-க்கு மேல் காயமடைந்திருப்பார்கள் என்றும் செய்தி கூறுகிறது.

---

### புதுக்கோட்டையில் ரேஷன் குறைவு

ஆகஸ்ட் 23-ந் தேதி முதல் ரேஷன் ஒரு நாளைக்கு நபர் ஒன்றுக்கு 8 அவுன்சாகக் குறைக்க சர்க்கார் உத்தரவிட்டிருக்கிருர்கள்.

---

# புலவர் போட்டி

வெந்ததைத் தின்று விதிவந்தால் சாவதென்று
மந்தைபோல் வாழ்ந்து மடிவோர்க்கும்—சிந்தை
[கெட்டு]
மெய்யைப் பொய் யென்று மிகைப்படுத்திக் கூறுகின்ற
பொய்யற்கும் உண்டோ புகழ்.

சைகோன்-ராஜமாணிக்கம், புதுச்சேரி.

கண்டெனவே பேசும் கணிகையரின் இல்லடைந்து
பண்டைப் பொருளிழந்த பாதகர்க்கும்-நண்பர்களே!
தொய்யல் மிகவளித்துத் துயர்க்கடலில் ஆழ்த்துகிற
பொய்யற்கும் உண்டோ புகழ்.
[தொய்யல்- துன்பம்]

ரே. சுப்பிரமணியன், கண்டனூர்.

ஊனை நிலமகட்கும் ஒன்உயிரைத் தண்டமிட்கும்
தான்கொடுக்க எண்ணுத் தமிழற்கும்—தேனைநிகர்
தெய்வப் புலவன் திருக்குறளைப் போற்றுர்க்கும்
பொய்யற்கும் உண்டோ புகழ்.

மு. சண்முகசுந்தரம், சாக்கோட்டை.

ஒற்றுமை இன்மை உணர்ந்ததால், வெள்ளையன்
சற்றும் அஞ் சாதுபொய் சாற்றிட்டான்—
[இற்றைக்குப்
பொய்கள் தெரியப் புகழிழந்து நாணுகின்ருன்
பொய்யர்க்கும் உண்டோ புகழ்?

மு. இளநாகன் மேலச்சிவபுரி.

செவ்வாய் பகையென்பார்! செய்வேன் பரிகாரம்;
இவ்வாறு செய்தால் இகலிலையென்—றெவ்வாத
பொய்பல கூறிப் பொருள்பறிக்கும் சோதிடராம்
பொய்யற்கும் உண்டோ புகழ்.

கரு. காசி, வித்வான்மாணவர், மேலைச்சிவபுரி.

திருட்டுத் தனமாய்க் குருட்டுநம் பிக்கை
மருட்டிப் புகட்டி மகிழ்ந்தார்—தெருட்டுண்டு
மெய்யுணர்ந்த மக்கள் விரட்டுகிருர் ஆரியரை,
பொய்யர்க்கும் உண்டோ புகழ்!

மு. சேதுராமன், மேலைச்சிவபுரி.

பெண்ணிழந்தும், பெற்ற மகவிழந்தும் மேதினிமேல்
மண்ணும் இழந்தாச் சந்திரன்தான்—எண்ணுங்கால்
வாய்மையா லன்ருேநல் வாழ்வுறரு னன்றிப்
பொய்யற்கும் உண்டோ புகழ்

ரா. ஆறுமுகம்பிள்ளை, மேலைச்சிவபுரி.

ஈசனணி பூவை ஏகாலிப் பூச்சியது
பாசமுடன் பற்றிப் பறப்பதுபோல்—மாசுடையோர்
மெய்யாரைச் சார்ந்தும் மேதையுருப் பேதைப்
பொய்யற்கும் உண்டோ புகழ்.

மெ. சிதம்பரம், கண்டனூர்.

கூர்வாளைக்கொண்டு கொலைசெய்து வாழ்பவர்க்கும்,
ஓர் மகளிர் கற்பைச் சிதைப்பவர்க்கும்,—நேர்மைமிகு
மெய்நெஞ் சுடையார்க்கு விண்தொல்லை செய்
[பவர்க்கும்
பொய்யற்கும் உண்டோ புகழ்,

மு. ரெங்கநாதன், புதுவயல்.

கன்னித் தமிழ்நாட்டில் கற்றறிந்தார்க் கேயன்றி
மன்பதையி(ல்) உள்ள மடையர்க்கும்;—இன்னுனில்
உய்யவழி யில்லா உலோபிக்கும்; தீயோர்க்கும்;
பொய்யற்கும் உண்டோ புகழ்

மெ. மாணிக்கம், ஆருவயல்.

வாழ்வினை யொன்றே உலகில் ஒருவர்க்குத்
தாழ்வும் உயர்வும் தருமென்ற—பாழ்பட்ட
பொய்யுரையால் நம் முயற்சி போக்கடித்த நஞ்சனைய
பொய்யர்க்கும் உண்டோ புகழ்?

ராம. சுப. வெங்கடாசலம், மன்னர்பிரான் கல்லூரி,
புதுக்கோட்டை.

கல்லாத பேரழகன் கற்றுத் தெளிந்துணர்ந்த
நல்லார்முன் னெய்துவனே நற்புகழைச்—சொல்
[கிளியே
மெய்யறமே பூண்டொழுகும் மேதையரின்
[பேரவையில்
பொய்யற்கும் உண்டோ புகழ்.

ராம. சோமசுந்தரம் கதிரேசன்கழகம், காரைக்குடி.

செந்தமிழில் வாய்ந்த திருக்குறளை ஆரியத்தில்
வந்ததென்றும் மேலும் வடமொழியின்-சொந்த
[மின்றேல்
உய்யாது காணென் றுளறுபவ ராம்பச்சைப்
பொய்யர்க்கும் உண்டோ புகழ்?

கே. சந்தசாமிஐயர், நேமத்தான்பட்டி.

நல்லவையில் ஏற்றுவார் நாத்தடிக்கப் பேசிடுவார்
சொல்லளவில் வீரரென்றே சொல்லிடலாம்— நல்
[லழகா
மெய்யன்றிப் பொய்புரிந்து மேதினியை ஏமாற்றும்
பொய்யற்கும் உண்டோ புகழ்.

கதி. சுந்தரம்.

அன்பே தமிழாக ஆர்வமே காவியமாய்
இன்புருகு சிந்தை இசையாக—அன்புருகும்
மெய்யர்க்கே யாளாய மெய்யர்க்காம் அன்றிப்
பொய்யற்கும் உண்டோ புகழ்.

ப. அ. கருப்பன் செட்டியார், சிறுகூடற்பட்டி.

சென்னைப் பிரதமரின் சீர்சால் புகழழிக்க
நன்மை பலவிகழ்த்து நாடோறும்— புன்மையால்
பொய்யை பலகூறிப் புவியோரை ஏய்த்தவரும்
பொய்யர்க்கு முண்டோ புகழ்

இஸ்மாயில், க. சே. கல்லூரி, மேலைச்சிவபுரி.

இன்பச் சுதந்திரமா? இன்றையே நல்கிடுவேன்
என்று பலஆண்டாய் ஏமாற்றும்—சின்னதொரு
புன்மைநிறை வெள்ளையர்க்கே போதாத காலமிதிற்
பொய்யற்கு முண்டோ புகழ்

சோம. திருநாவுக்கரசு, நாச்சியாபுரம்.

செய்யாமை யாற்பெரிய சீர்த்திபெற வேண்டுமெனிற்
பொய்யாமை யேபோதும் பொற்கொடியே—பொய்
[யாத
மெய்யற்கு மேயுண்டோ மேதினியி லேஇழிவு
பொய்யற்கு முண்டோ புகழ்

பழ. மு. முத்தழகப்பன், சென்னை.

கள்ளமிலா வெள்ளையுளம் கொண்டுள்ளோர் காசினி
[யிற்
கொள்ளைப் புகழைத்தான் கொண்டிடுவார்—உள்ள
[மதில்
பொய்கொண்டு மெய்யுடையார் போல நடிக்கின்ற
பொய்யற்கு முண்டோ புகழ்

ராம. மு. ஓவியன்,சிவபுரி.

பாலதனில் மோர்கலந்த பான்மை பழந்தமிழ்
நூலதனில் உள்ளநல் நுண்பொருளை—மாற்றியே
பொய்யதனை நாட்டிப் புலவர்பேர் தீட்டிட்ட
பொய்யற்கும் உண்டோ புகழ்.

வே. அண்ணுமலை, வலையபட்டி.

உள்ளொன்றுவைத்தே ஒழுக்கத்து வேறுன
கள்ளரவர்க் கென்னபயன் கற்றறிந்தும்—தெள்ளிய
[சீர்
மெய்யர்க்கே யாகுமன்றி மேதினியில் எந்நாளும்
பொய்யர்க்கும் உண்டோ புகழ்.

அண. அண்ணுமலை கதிரேசன் கழகம், காரைக்குடி.

தண்டமிழ் நாட்டிலும் தையலென் றெண்ணியும்
எண்ணரும் மக்கள் இருப்பினும்—மண்ணுலகில்
செய்யும் செயலையும் செம்மையாய்ச் செய்துவிக்காப்
பொய்யற்கும் உண்டோ புகழ்

சு. கருப்பையாஅம்பலம், நாச்சியாபுரம்.

ஆங்கில அரசில் அகிம்சையைக் கைக்கொண்டு
பாங்குடனே வாங்கிப் பகர்வதுடன்—பூங்கொடியே
செய்யனுறும் காரியத்தைச் செயலளவில் காட்டு
[விக்காப்
பொய்யற்கும் உண்டோ புகழ்

பேரி. நா. நா. திருநாவுக்கரசு, நாச்சியாபுரம்

அடுத்த ஈற்றடி:-

**என்னை கிடையாதாம் இன்று**

—★—

## நச்சாந்துபட்டி

ஆகஸ்ட் 16உ தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு. கே. காமராஜநாடார் அவர்கள், புதுக்கோட்டை சமஸ்தான காங்கிரஸ் காரியதரிசி, திருமயம் தாலுகா சமஸ்தான காங்கிரஸ் நிர்வாகிகள் மேஜர் சுப்பிரமண்யம் முதலியவர்கள் விஜயம் செய்தார்கள். அவர்களை இ. தே. ரா. அணிவகுப்புடனும் மேளவாத்தியங்களுடனும் வரவேற்று ஊர்வலமாக அழைத்து வந்து, நேதாஜி மைதானத்தில் கொடியேற்று விழாச் செய்து ஆங்கு அமைக்கப் பெற்றுள்ள அலங்காரப் பந்தலுக்குச் சென்று பல்லாயிரக் கணக்கான மக்களுக்கு, கட்டுப்பாடு, உணர்ச்சி, தியாகத்தை பயன்படுத்தும் விதம், சமஸ்தான காங்கிரஸில் சேர்ந்து தொண்டாற்றுவது பற்றியும் மிக விரிவாக மக்களுக்கு விளக்கினர்கள். திருக்கோவிலூர் இராஜ கோபால் அவர்களும், "புதுக்கோட்டை சமஸ்தானமும், அதில் வாழும் மக்களின் பொறுப்பும்" என்பது பற்றி மக்களுக்கு உணர்ச்சி ததும்பப் பேசினர்கள். காரியதரிசி முத்து. சுப்பையா வந்தனேபசாரம் கூறக் கூட்டம் இனிது முடிவெய்தியது.

---

### ஆகஸ்டு புரட்சி வாரம் ஆத்தங்குடி

13. 8. 46 மாலை 6 மணிக்கு மோதிலால் சதுக்கத்தில் திருப்பத்தூர் தாலுகா விவசாய சங்கக் காரியதரிசி, கு. தங்கவேலனுல் தேசியக்கொடி யேற்று வித்ததும் கொடியின் கீழ் காரைக்குடி மாணவர் காங்கிரஸ் காரியதரிசி கா. பழநியப்பன் அவர்கள் தலைமையில் ஆகஸ்டு புரட்சி வாரம் கொண்டாடப் பெற்றது. ஆகஸ்டு தியாகிகளான பூலாங்குறிச்சி சுப்பையாத் தேவர், கருப்பையா, கெற்குப்பை கா. வெட்சுமணன், தாலுகா காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி காரைக்குடி சாமிநாதராவ், கு. தங்கவேலன் முதலியோர் பேசினர்கள். ஆகஸ்டு போராட்டத்தில் ஈடுபட்டு உழைத்த தியாகிகட்கு வணக்கஞ் செலுத்தியும் "வெள்ளையனே வெளியேறு" என்ற தீர்மான அடிப்படையில் காங்கிரஸ் ஆரம்பிக்கும் எவ்வித போராட்டத்திலும் கலந்து கொள்ள உறுதி கொள்வதெனவும், ஆகஸ்டில் உயிர் நீத்த தியாகிகட்கு அனுதாபங் காட்டியும் தீர்மானங்கள் நிறைவேற்றப் பெற்றன.

---

### ஜில்லாக் காங்கிரஸ் கமிட்டிக் காரியாலய மாற்றம்

ராமநாதபுரம் ஜில்லா காங்கிரஸ் கமிட்டிக் காரியாலயம் மாநமதுரையில் மெயின் பஜாரிலுள்ள வீரப்பா கட்டிடத்தின் மேன் மாடியில் திறக்கப்பட்டிருக்கிறது. கடிதப் போக்குவரத்து செய்வோர் மேற்படி விலாசத்துக்கு அனுப்புமாறு அறிவிக்கப்படுகிருர்கள்.

---

### தேவகோட்டை

கெஜட் பதிவு பெருத சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் கூட்டம் ஆகஸ்ட் 18-ந் தேதி மாலையில் நடைபெற்றது.

1-7-44 முதல் இப்பொழுது தரப்பட்டுவரும் பஞ்சப்படி இரட்டிப்பாகப்படவேண்டுமென்றும் சம்பளத்தில் 10 சதவிகிதம் வீட்டு வாடகை அலவன்ஸ் தரவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொண்டும், உடையணிந்து வருவதில் உள்ள விதிகளை நீக்கவேண்டுமென்றும், ரேகர்ட்டு காபிஸ்ட்டுகளுக்கு குறைந்த பக்ஷ சம்பளம் ரூ. 60 ஆக இருக்கவேண்டுமென்றும் தீர்மானங்கள் செய்யப்பட்டன.

## பஞ்சத்தை விரட்ட ராணுவ உதவி

தானியங்களையும் இதர உணவுப் பொருள்களையும் பற்றாக்குறைப் பிரதேசங்களுக்கு அனுப்பி வைப்பதில் சில அதிகாரிகளுக்கு உதவியாக இப்போது ராணுவ வாகனுதிகள் ஏராளமாய்ப் பணிபுரிந்து வருகின்றன.

ஜூன் மாதத்தில் மட்டும், பெஷாவார், ராவல்பிண்டி, லாகூர் முதலான பிரதேசங்களில் பல்வேறு அளவில் பாரம் ஏற்றிச் செல்லக்கூடிய மோட்டார் வண்டிகள் சுமார் 450 உபயோகிக்கப் பட்டிருக்கின்றன. சென்னைப் பிரதேசத்தில் கனரக ராணுவப் போக்குவரத்து வண்டிகள் தானியங்களை ஏற்றிச் சென்று வருகின்றன. ஐக்கிய மாகாணத்தில் கனரக வண்டிகள் 100 தவிர, மோட்டார்ப் போக்குவரத்துப் பிரிவுகள் நான்கு (சுமார் 600 வண்டிகள் அடங்கியவை) உணவுப் பொருள்களை ஏற்றிச் சென்றுவருகின்றன.

சமஸ்தானங்களிலும் ராணுவ வாகனுதிகள் உபயோகப்பட்டுவருகின்றன. ஜயப்பூர் சமஸ்தானத்தில் உண்பொருள்களைச் சுமந்து செல்வதில் மோட்டார்ப் போக்குவரத்துப் பிரிவுகள் இரண்டு(சுமார் 300 வண்டிகள் கொண்டவை) பூரா வாக ஈடுபட்டிருக்கின்றன. மலைப்பாங்கான பூஞ் சமஸ்தானத்தில் லேசான வாகனுதிகள் தவிர, வலுவான ஜீப் வண்டிகளுங்கூட மலைப் பிராந்திய மூலை முடுக்குகளில் அங்கங்கே சிதறிக் கிடக்கும் பல ஊர்களுக்கும் உணவுப் பொருள்களை வழங்கி வருவதற்கு உபயோகப்படுத்தப்படுகின்றன.

### கருங்குளம்

செல்வ விநாயகர் வாசகசாலையின் சார்பில் கூரமாளிகைக்கு எதிரேயுள்ள தென்னஞ் சோலையில் மாலை 4-30 மணிக்கு ஆகஸ்டு தியாகிகள் தினக் கொண்டாட்டம் கண்டரமாணிக்கம் உயர்திரு. கரு. நாச்சியப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் நடந்தது. ஆகஸ்ட் தியாகிகளின் ஆன்மா சாந்தியடையும் பொருட்டு இரண்டு நிமிட மௌனப் பிரார்த்தனை நடந்தது. தோழர்கள் திரு. வி. சாமிநாதன், வ. நாராயண அய்யர், கரு. நாராயணன், அ. மா. விஸ்வநாதன் முதலியோர் ஆகஸ்ட் தீர்மானத்தைப் பற்றியும் கொண்டாடுவதின் நோக்கம் பற்றியும் எடுத்துரைத்தனர். தலைவர் முடிவுரைக்குப்பின் 1942 ஆகஸ்ட் 8௳ யின் அ.இ.கா கமிட்டியின் தீர்மானத்தை ஆதரித்து ஓர் தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது. நாட்டு வணக்கம் நன்றி கூறலுடன் கூட்டம் இனிது நிறைவேறியது.

### ஜில்லாக் கலெக்டர் தோட்டிவேலை செய்தார்

விசாகபட்டினத்தில் தோட்டிகளின் வேலை நிறுத்தத்தின் விளைவால், இந்திய சிவில் சர்விஸ் அதிகாரிகள் தோட்டி வேலை செய்கின்றனர். ஆகஸ்டு 14௳ விசாகபட்டினம் ஜில்லாக் கலெக்டரும் சுகாதார அதிகாரியும் கறைமுகப் பிரதேசத்திலுள்ள ஒரு கக்கூசைச் சுத்தம் செய்தனர். பிரம்மசமாஜத்தைச் சேர்ந்த ஜாதி ஹிந்துக்கள் கக்கூஸ்களைச் சுத்தம் செய்யவும் வீடுகளிலிருந்ததை லாரிகளுக்கு அப்புறப்படுத்தவும் கோரப்பட்டனர். ராணுவமும் இக்கைங்கரியத்தில் ஈடுபட்டிருக்கின்றது.

## தோட்டிக்கு ராணுவப் பதக்கம்

1942ல் ரங்கூனிலிருந்து இம்பால் முனைவரையில் பின்னடைந்தபோதும் 1944ல் அரக்கான் போராட்டத்தின் போதும், 1945ல் ராம்ரீ, தாங்கூப், ரங்கூன் போட்டங்களின் போதும் தீவிர பங்கெடுத்துக் கொண்ட 2-வது எல்லைப்புறத் துப்பாக்கிப் படைத் தோட்டியான சந்து என்பவருக்கு ராணுவப் பதக்கம் அளிக்கப்பட்டிருக்கிறது.

மேற்சொன்ன ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் எதிரியோடு தொடர்பு ஏற்பட்ட போதெல்லாம் கூழைப்படையிலுள்ள இவர் போர் வீரராக மாறிக்கொண்டு, காயமடைந்த வீரரிடமிருந்தோ மடிந்து வீழ்ந்த எதிரியிடமிருந்தோ கைப்பற்றப் பட்ட துப்பாக்கி, குண்டுகள் சகிதமாகப் போராட்டத்தில் ஈடுபட்டு வந்தார். ஒருசமயம், இவர் தலையில் சுமந்து சென்ற குண்டுப்பெட்டி எதிரியால் சுட்டுத் தள்ளப்பட்டதும் உடனே இவர் ஓட்டமாய்த் திரும்பி ஓடிச் சென்று மற்றொரு பெட்டியைக் கொண்டுவந்தார்.

1945 மார்ச் 15௳ யன்று சேபின் என்னுமிடத்தில், ஜப்பானியர் வெகு தீவிரமாகக் காத்து நின்ற அரணிடத்தைத் தமது படை தாக்கிய போது, சந்து தம் படையின் முன்னணிக் கோஷ்டியுடன் தங்கி நின்றார். துப்பாக்கிக் குண்டுகள் பறந்துகொண்டிருக்கையில்கூட காயமடைந்த வீரர்களை இவர் மூன்று தடவை காப்பாற்றிக் கொண்டுவந்தார். தாக்குதல் வெற்றிகரமாக முடிவுற்ற பின், இரவு பூராவும் நடந்த எதிர்த் தாக்குதலில் இவரும் தம் பங்கைச் செய்துவந்தார்.

### இந்தியாவுக்கு கிழக்கு ஆப்பிரிக்க இந்தியரின் நன்கொடை

கிழக்கு ஆப்பிரிக்க இந்திய தேசிய காங்கிரஸ் நன்கொடைகள் வசூலித்து இந்தியாவுக்கு இலவசமாக வாங்கியனுப்பியுள்ள 2,000 பால் பவுடர் டப்பிகள் சென்னைக்கு வந்து சேர்ந்திருக்கின்றன. இவற்றை சென்னை பிரதேச உணவுக் கமிஷனர், காங்கிரஸ் அதிகாரிகளைக் கலந்துகொண்டு விநியோகிப்பார்.

## மழைக்கு வரவேற்பு

வி. வே. சொக்கலிங்கம்.

சென்ற ஆண்டு மழையின்மையால் வேளாண்மை கொஞ்ச நஞ்சம் கூட இல்லாதுபோய், ஊருணி கண்மாய்கள் கூட வற்றி வரண்டுபோய் விட்டன. ஆகையால் இந்த ஆண்டு மழை பொழிந்து வேளாண்மைக்கு உதவியாகவும் ஆடுமாடுகள் செழிக்கவும் ஊருணி கண்மாய்களில் நீர் நிரம்பவும் வேண்டுமென விவசாயிகள் வேண்டுகிறார்கள்.

இன்மழை யுன்னு லன்றோ?
இடிமுர செலித்து மின்னல்
ஏற்றிய கொடியை காட்டி
மடியினில் மாயும் மாந்தர்
மாய்ந்திடா தெழுதல் வேண்டி
கடிதநீ இங்குவந்து
காத்திடக் கோருகின்றோம்;
வடிவுறு துளிகள் கொண்டு
வருவையே மாரி மன்னே!
மாமழை நீதா னின்றேல்
வாரிதி வளமும் குன்றும்
பாமலர் எழுது வோரும்
பசியினுல் வாடலாகும்
கா மணம் சிறக்கப் போமோ?
கவலைகள் மாய்ந்து ய்போமோ?
'தா'மத மின்றி மாரி!
தவளைகள் கத்தநீ வா!
ஊருணி கண்மா யாவும்
உலர்ந்து நற் பொட்டலாகப்
பாரினிற் காணல் நன்றோ?
பகலவன் வெப்பம் காயும்
காரணத் தாலே நல்ல
காடுதான் தீய்தல் நன்றோ?
வரினைப் பூட்டி நின்றோம்
எழுந்துநீ வாராய் மாரி!
நடுக்கடல் தவிக்கும் பேர்க்கு
நாவாய்போல் நீயே வந்து
அடுத்தெமைக் காத்து நின்று
அல்லலை யொழித்தி டாயோ?
விடுத்திடும் எங்கள் சொல்லை
மேன்மையாய்க் கருதி நன்கு
வடித்த நற் கரியமேக
மாமழை வருவாய் நீயே!

# தமிழிசையை ஆதரியுங்கள்



## மலேயா இந்தியருக்கு நிவாரண உதவி

மலேயாவிலுள்ள இந்தியர்களின் நிவாரணத்திற்காக 10லக்ஷம் ரூபாய்கள் இந்திய சர்க்காரால் உதவப்பட்டுள்ளதென இந்திய சர்க்கார் பிரதிநிதி திரு எஸ் கே செட்டூர் அறிவிக்கிறார். முதல் 6 மாதங்களில் 5 லக்ஷ ரூபாய்கள் செலவிடப்படும். இதில் ஒரு லக்ஷரூபாய் பணமாக விதவைகள், வேலையில்லாதோர், வயோதிகர் முதலியோர்களுக்கு உதவப்படும். பாக்கியுள்ள 4லக்ஷ ரூபாய்கள் துணிகள் மீது செலவழிக்கப்படும். இந்தியசர்க்கார் வைத்தியக் கோஷ்டி மேலும் 6மாதங்கள் மலேயாவில் தங்கும். சமீபத்தில் 30,000 ரூபாய்களுக்குக் கள்ளத்தனமாக விற்கப்பட்ட மருந்துவகைகள் திரும்பவும் கைப்பற்றப் பட்டிருப்பதாகவும் கூறினர். சயாம் காஞ்புரி முகாமில் இருக்கும் அனாதைக்குழந்தைகளை பரிபாலிப்பதற்காக வடக்கு மலேயாவில் புதிய முகாம் ஒன்று கட்டப்படுமெனவும் கூறினர்.

### டிரேட் மார்க் விதிகளுக்குத் திருத்தப் பிரேரணை

பிரிட்டிஷ் இந்தியாவிலோ இந்திய சமஸ்தானங்களிலோ சரக்குகள், சமான்கள் சம்பந்தமாக "டிரேட் மார்க்" வியாபார அடையாளங்கள் பதிவு செய்யப்பட்டிருந்தால் அவைகளைப் பரஸ்பரம் இரு பிரதேசங்களிலும் அங்கீகரிப்பதற்கான ஆரம்ப ஏற்பாடுகள் இப்போது பூர்த்தியடைந்துவிட்டன. இந்தத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவருவதாகவும், இந்தக் காரியத்துக்காக, 1940-ம் வருஷத்திய டிரேட் மார்க் சட்டத்தில் 1946-ம் வருஷத்திய டிரேட் மார்க் திருத்தச் சட்டமூலமாகச் செய்துள்ள திருத்தங்களுக்கு ஏற்ப விதிகள் அமையுமாறு செய்வதற்காகவும் இச் சந்தர்ப்பத்தில் 1942-ம் வருஷத்திய டிரேட் மார்க் விதிகளைத் திருத்த உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

1942-ம் வருஷத்திய டிரேட் மார்க் விதிகளில் செய்ய உத்தேசிக்கப்பட்டுள்ள திருத்தப் பிரேரணைகள் இன்று விசேஷ கெஜெட் வெளியீடு ஒன்று மூலமாகப் பிரசுரிக்கப்படுகின்றன. திருத்தப் பிரேரணைகளை 1946 செப்டம்பர் 1-உக்குள் இறுதியாக உருக்கொடுத்து வெளியிட உத்தேசிக்கப்பட்டிருப்பதால், அத் திருத்தப் பிரேரணை சம்பந்தமான அபிப்பிராயங்களை இந்திய சர்க்கார் வர்த்தக இலாகாவுக்கு 1946 ஆகஸ்ட் 30 உயன்றோ அதற்கு முன்னதாகவோ கிடைக்கும்படி அனுப்பவேண்டும்.

### மாகாண அரிசி ரேஷன் மீண்டும் குறையாது

டில்லி உணவு மகாநாட்டுக்குச் சென்று திரும்பியுள்ள சென்னை உணவு மந்திரி திரு ராகவமேனன் நமது மாகாண நிலைமைபற்றி தாம் வெளியிட்டதாகப் பத்திரிகைகளில் வெளியான செய்திகள் தவறென்றும், இந்தோனேஷியா, பர்மா ஆகிய இடங்களிலிருந்து அரிசி வருவதால் மாகாண உணவுப் பொருள் நிலைமை அபிவிருத்தி அடையுமென்று தாம் நம்புவதாயும், குறைக்கப்பட்ட இரண்டு அவுன்ஸ் மீண்டும் சீக்கிரத்திலேயே கொடுக்கப்படலாமென்றும் தாம் நம்புவதாயும் மேலும் குறைக்கப்படுவதற்கு இடமில்லை என்றும் அறிவிக்கிறார்.

# தமிழ்மொழி வாழ்க

## ராயல் இந்திய பீரங்கிப் படை

ராயல் இந்தியப் பீரங்கிப் படையைச் சேர்ந்த 25,000 பீரங்கி வீரர்கள் இதுவரை படை கலைக்கப்பட்டு, மதராஸிலிருக்கும் ராயல் இந்தியப் பீரங்கிப்படை டிப்போ —தஸ்தாவேஜு ஸ்தலத்திலிருந்து விடுவிக்கப்பட்டிருக்கின்றனர். இந்தப்படையிலிருந்து கடைசியாக விடுவிக்கப்பட்ட பீரங்கி வீரர் சைன்யத்தில் 16 வருஷம் சேவை செய்துள்ள பீரங்கி வீரர் பார்காட் அலி என்பவராவார்.

1930-ல் மலைப் பீரங்கிப் படையில் சேர்த்துக்கொள்ளப்பட்ட இந்த வீரர் இந்தியாவின் வடமேற்கெல்லையிலும், வஸீரி ஸ்தானிலும் நடவடிக்கைகளில் பங்கெடுத்துக்கொண்டிருக்கிறார். சென்ற யுத்தத்தின் போது தியோலாலியிலிருக்கும் பீரங்கிப் பள்ளியில் சேவை செய்தார்.

இரண்டாவது உலகயுத்தம் மூண்ட போது இந்தியப் பீரங்கிப் படையில், 6 மலை ரெஜிமெண்டுகளும், ஒரு போர்க்கள ரெஜிமெண்டும், பல்வேறு சிறு பிரிவுகளுமாக மொத்தம் 12,842 பேர் இருந்தனர். இந்தப்படை வெகு துரிதமாக விஸ்தரிப்படைந்து கொண்டே வந்து இறுதியாக 1945-ல் மொத்தம் 83, 986 வீரர்கள்கொண்ட ஒரு பெரிய படையாக ஆகிவிட்டது.

இந்தப்படை யுத்தத்தின்போது புரிந்த அரிய சேவையைப் பாராட்டி, 1945 அக்டோபரில் இதற்கு "ராயல்" என்ற பட்டம் அளிக்கப்பட்டது.

### ஹரிஜன ஆலயப் பிரவேசம் திறக்கப்பட்டுள்ள கோவில்கள்

பிருகதீஸ்வரர் கோயில், தஞ்சாவூர். ஸ்ரீ விஸ்வநாதஸ்வாமி கோயில் மலப்பாக்கம் (மாயவரம் தாலுகா) மீனாக்ஷி சுந்தரேஸ்வரர் கோயில், மதுரை. கூடலழகர் கோயில், மதுரை. ஸ்ரீ சுந்தரராஜப்பெருமாள் கோயில், வளையப்பட்டி மேலூர் தாலுகா (மதுரை). காளமேகப்பெருமாள் கோயில், திருமோகூர் (மதுரை) ஸ்ரீ கம்பராயபெருமாள் கோயில் கம்பம், பெரியகுளம் தாலுகா. ஸ்ரீ சொக்கநாதஸ்வாமி கோயில்: கொளவார்பட்டி சாத்தூர். குத்தாலநாதஸ்வாமி தேவஸ்தானம் குற்றாலம் தென்காசி தாலுகா. காசி விஸ்வநாதஸ்வாமி தேவஸ்தானம் தென்காசி. ஆஞ்சனேயஸ்வாமி சென்னகேசவஸ்வாமி கோயில் நந்திகோடகூர், கர்நூல் தாலுகா. ஆஞ்சனேயஸ்வாமி கோயில் போலவரம் கர்நூல்.

### ரெயில்வே வசதிகள்

ராணுவத்திடமிருந்து ரயில் வண்டிகள் திரும்பிவர ஆரம்பித்திருக்கின்றன. சென்ற இரண்டு மாத காலத்தில் சுமார் 100 வண்டிகளை சிவிலியன் உபயோகத்துக்காக ரயில்வேக்கள் திரும்பப் பெற்றன. ரயில்வே தொழிற்சாலைகளில் வண்டிகள் உற்பத்தி ஆரம்பித்து விட்டது. அடுத்த வருஷத்திற்குள் குறைந்தது 500 மூன்றும் வகுப்பு வண்டிகளை லயன்களில் விடமுடியும். வாகன்கள் சப்ளை நிலைமை அபிவிருத்தியடைந்தாலொழிய சரக்குப் போக்குவரத்துகள் மீதுள்ள தடைகள் நீங்காது என்றும் ரயில்வே பிரதமக் கமிஷனர் மத்திய மாகாண வர்த்தகசபை நிர்வாகக் கமிட்டியுடன் ரயில்வே பிரச்னைகளைப் பற்றி விவாதிக்கையில் கூறினார்.

## முடிந்தவரை உணவை மிச்சப்படுத்துங்கள்

(பிரதேச உணவுக் கமிஷனர்திவான் பகதூர் வி. பி. கருணாகர மேனன், ரேடியோவில் செய்த சொற்பொழிவின் பகுதி)

நாம் மிச்சப்படுத்தும் ஒவ்வொரு அவுன்ஸ் உணவும்-ஒரு அவுன்ஸ் தங்கத்துக்குச் சமமென்று நான் சொல்லப்போவதில்லை; உணவில்லாமல் தங்கத்துக்கு மதிப்பேது? ஆனால் மிச்சப்படுத்தும் ஒவ்வொரு அவுன்ஸ் உணவும் எங்கோ ஓரிடத்தில் யாரோ ஒருவரின் உயிரைக் காப்பாற்றுவதற்கு உதவியாக இருக்கும். தற்போது இந்த நிலைமையிலேயே நாம் இருக்கிறோம். நீங்கள் உங்கள் வீட்டில் சொற்ப அளவு தானியம் சேமித்துவைத்தால் நூற்றுக்கணக்கான மைல்களுக்கப்பால் எங்கோ ஓரிடத்தில் பட்டினி கிடக்கும் ஒரு ஏழை ஜீவனுக்கு அந்த அளவு தானியம் கிடைக்க வழி செய்ததாகத்தான் அர்த்தம்; பதுக்கி வைத்தலையும் கொள்ளை லாபமடித்தலையும் அந்த அளவுக்குத் தடுத்து நிறுத்தியதாகத்தான் அர்த்தம்; நானும் நீங்களும், ஒவ்வொருவருமே, எந்தப் பொதுக் களஞ்சியத்திலிருந்து நம் ஜீவனுக்குச் சக்தியையும் சுவாசத்தையும் கிரஹித்துக்கொள்ள வேண்டியதாயிருக்கிறதோ அந்தப் பொதுக் களஞ்சியத்தை அந்த அளவுக்கு நிரப்பி வைப்பதாகத்தான் அர்த்தம். ஆயிரக்கணக்கான பேர் ஆயிரக்கணக்கான தடவை இக் கைங்கர்யத்தைத் திரும்பத் திரும்பச் செய்தால், நாம் குப்பையிலே போட்டிருக்கக்கூடிய தானியத்தையெல்லாம் இப்படிச் சமுதாய வாழ்க்கைக்குப் பயன்படும் காணிக்கைகளாக மாற்றினால், நாட்டின் மொத்த உணவு சப்ளைக்கு அவைகளால் எவ்வளவு அதிகமாகக் கிடைக்கும்.

உண்மை இதுதான். நடுத்தர வகுப்பினரும் உயர்தர வகுப்பினருமாகிய நாம் நமக்குத் தெரியாமலே அளவுக்கு மிஞ்சிச் சாப்பிட்டோ, குப்பையில் எறிந்தோ ஏழை மக்கள் வயிறு வளர்க்கப் பயன்படவேண்டிய ஏராளமான உணவுப் பொருள்களை வியர்த்தமாக்கி வருகிறோம். நாம் தெரியாமல் தான் இவ்விதம் செய்கிறோம் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், தெரியாமல் செய்தாலும் சரி, தெரிந்துகொண்டே வேண்டுமென்று செய்தாலும் சரி, நம் செய்கையால் ஏற்படும் பலன் ஒன்றுதான்- ஏழைக்கு அத்தியாவசியமான. நமக்கு அத்தியாவசியமில்லாத பொருள் ஏழை மனிதருக்குக் கிடைக்கமுடியாதபடி செய்து விடுகிறோம். நாமோ பழங்கள், காய்கறிகள், பிஸ்கத்துக்கள், மீன் முதலிய உணவுப்பொருள்களை வாங்கிக் கொள்ள முடியும். ஆனால், ஏழைக் கூலிக்காரனும், நிலத்தில் பாடுபடும் உழைப்பாளியும் இவைகளை நாடுவது முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்படுவதுபோலத்தான். ஆகையால் வழக்கத்தைவிட அரிசியைக் கொஞ்சம் குறைத்துப்போட்டுச் சமயல் செய்யும்படி நீங்கள் ஏன் உங்கள் மனைவிமார்களைக் கேட்டுக்கொள்ளக் கூடாது? மிச்சப்படும் அந்த அரிசியை சர்க்காரிடம் கொடுத்து அதன்மூலம் ஏன் ஏழை மக்களுக்கு அளிக்கக் கூடாது?

லட்சக்கணக்கான மக்களின் உயிர் ஊசலாடிக்கொண்டிருக்கும் சமயத்தில், இலையிலோ தட்டிலோ சாப்பாட்டை மிச்சம் வைப்பதென்பது சிறிதுகூடச் சகிக்கமுடியாத செய்கையாகும். உங்கள் வயிற்றுக்கு எவ்வளவு சாப்பிட்டால் சரியாக இருக்கும், எவ்வளவு சாப்பிட்டால் அதிகமாகிவிடும் என்பது இதற்குள் உங்களுக்கு நிச்சயமாகத் தெரிந்து தானிருக்க வேண்டும். சமைக்கப்பட்டுள்ள ஆகாரத்தை அதற்குத் தகுந்தாற்போல் நீங்கள் நிரவிச் சாப்பிட வேண்டும். இன்னும் ஒரு கவளத்திற்கு இடமிருக்கும்போதே சாப்பாட்டை முடித்துவிட வேண்டுமென்பது அக்பரின் கொள்கை. அது மிகவும் நல்ல வழக்கமென்றுதான் சொல்லவேண்டும். இன்றைக்கு அதை அனுபவத்தில் கொண்டுவந்தால் எவ்வளவோ நன்மை ஏற்படும்.

பணக்காரர்கள் அடிக்கடி ஒரு வேளை உபவாசம் இருப்பதென்பதும் நல்ல யோசனைதான். நான் உங்களுடன் பந்தயம் கட்டுகிறேன். கிளப்பிலே சிற்றுண்டி அருந்தியதாலோ, நண்பருடன் ஆகாரம் புசித்ததாலோ, வயிறு நிறைந்துபோய் வீட்டில் மேற்கொண்டு சாப்பிட மனமில்லாமல் இருந்திருக்கிறீர்களா இல்லையா? அப்படியிருந்தும், உங்கள் வயிறு இருக்கும் நிலைமை தெரியாமல், சாப்பிடாமல் இருக்கக்கூடாதென்று உங்கள் மனைவி கட்டாயப் படுத்தியதற்காகவோ, வழக்கமாகச் சாப்பிடுவது தானே என்றோ மேலும் சாப்பிட்டிருக்கிறீர்களா இல்லையா? அந்தமாதிரி நினைப்பதை இப்பொழுதே விட்டு விடுங்கள். நிலைமையை வேறுவிதமாய் அலசிப் பாருங்கள். 'இன்று இரவோ நமக்குப் பசியெடுக்கவில்லை. வயிற்றுக்குச் சற்று ஓய்வு கொடுத்தால்தான் என்ன? அது நம் உடம்புக்கும் நல்லது. ஒரு ஏழைக்கும் கொஞ்சம் நல்லது செய்யும். சரி இன்று இரவு பட்டினி போட்டு விடுவோம்' என்று தீர்மானியுங்கள்.

நீங்கள் நிறுத்தவேண்டிய மற்றொரு பழக்கமும் இருக்கிறது. நிலைமை கடினமாக இருக்கும் இந்நாளில் அதை நிறுத்தித்தான் ஆகவேண்டும். மதச் சடங்குகளிலும் விருந்துகளிலும் கண்மூடித்தனமாக உணவை வாரி யிறைப்பதைத்தான் சொல்லுகிறேன். கல்யாணங்களிலும், சாவுகளிலும், திருவிழாக்களிலும், விருந்துகளிலும் நல்ல சாப்பாடு சாக்கடையிலே அடித்துக்கொண்டு போவதாகத்தான் எனக்குத் தோன்றுகிறது.

மக்கள் சிலரை மடியவிட்டு அர்த்தமில்லாத வகையில் உணவை வீணாக்குவதற்கேதுவான மதச் சடங்குகளையோ சமூகச் சடங்குகளையோ என்னால் விசேஷமாகக் கருதமுடியவில்லை. இவ்விஷயத்தில் பணக்காரர்களைப்போலவே ஏழைகளும் குற்றவாளிகள்தான். இத்தகைய சந்தர்ப்பங்களில் தயாரித்த உணவை எப்படியாவது வினியோகித்துத் தீர்த்துவிட வேண்டும் என்ற கருத்துதான் இருக்கும். அதே உணவை இத்தகைய பரபரப்பில்லாத சாதாரண சந்தர்ப்பத்தில் பயன்படுத்தினால் இன்னும் பல பேருக்கு நிரவிப் பரிமாறலாம்.

ரயில்வே அட்டவணை:

### திருச்சினுப்பள்ளி — மானுமதுரை

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| திருச்சினுப்பள்ளி | புற. | 6. 0 | 7. 15 | 13. 45 | — | 17. 48 | 22. 15 |
| புதுக்கோட்டை | " | 7. 35 | 8. 28 | 15. 20 | — | 19. 30 | 23. 39 |
| காரைக்குடி | " | — | 9. 31 | — | 14. 0 | 20. 38 | 0. 39 |
| சிவகங்கை | " | — | 10. 32 | — | 15. 0 | 21. 42 | 1. 40 |
| மானுமதுரை | சேர். | — | 11-5 | — | 15-40 | 22-25 | 2-18 |

### மானுமதுரை - திருச்சினுப்பள்ளி

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மானுமதுரை | புற. | — | 7-38 | 11-22 | — | 16-4 | 18-55 |
| சிவகெங்கை | " | — | 8-17 | 11-59 | — | 16-34 | 19.32 |
| காரைக்குடி | " | — | 9-39 | 13-10 | — | 17-47 | 20-45 |
| புதுக்கோட்டை | " | 7-48 | 10-45 | — | 15-55 | 18-53 | 21-50 |
| திருச்சினுப்பள்ளி | சேர். | 9-34 | 12-25 | — | 17-4 | 20-10 | 23-20 |

குறிப்பு:- காரைக்குடியில் 14-0 மணிக்குப் புறப்படும் வண்டி நேரே மதுரைக்கு 17-15 மணிக்கும் மதுரையில் 9-47 மணிக்குப் புறப்படும் வண்டி நேரே காரைக்குடிக்கு 13-10 மணிக்கும் வந்து சேர்கின்றன.



## காதலி தாயாக மாறிய விந்தை

டோக்கியோவில் 5வருஷ கடுங்காவல் தண்டனை அடைந்த அமெரிக்க சோல்ஜர் ஒருவர் அமெரிக்காவில் இருக்கும் தன் காதலிக்கு தண்டனை விபரத்தை அறிவித்தார் காதலி அதற்கு பின்வருமாறு பதில் எழுதினாள். "அன்புமிகுந்த ஆல்பர்ட், என்னால் 5 வருஷங்கள் காக்க முடியாது. என் நிலைமையை நீ உணர வேண்டும். நான் உன் தகப்பனரைக் மணந்து கொண்டு விட்டேன். என்னுடைய ஆசீர்வாதங்கள். இப்படிக்கு அன்பு மிகுந்த அன்னை"

### மோட்டார் விற்பனைக் கட்டுப்பாடு

மோட்டார்கள் விற்பனைக் கட்டுப்பாட்டை, இந்திய சர்க்கார் ரத்து செய்ய உத்தேசித்திருப்பதால் போட்டியும் கள்ள மார்க்கெட்டும் ஏற்படுமென்று சர்க்கார் கருதுவதாகத் தெரிகிறது. ஆகையால் மாகாணத்தில் விற்பனையைக் கட்டுப்பாடு செய்யும் முறையில் சட்டம் செய்ய சென்னை சர்க்கார் உத்தேசித்திருப்பதாகத்தெரிகிறது.

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

மணம் செய்யத் துணிந்தார்களே என்ற வார்த்தைகள் மாப்பிள்ளை காதிற்படும்படி பேசப்பட்டன. இனி நாம் இங்கு ஒரு விநாடி கூடத் தங்குவது கௌரவமில்லை யென்று பட்டதால் தான் அவர் உடனே ஊரை விட்டுப் புறப்பட்டு விட்டார்.

துக்கம்பட்டி என்ற பெயருக்கேற்ப, பெண்ணுக்குத் தாயார் கவலையால் நாளுக்கு நாள் உடல் மெலிந்து அன்ன ஆகாரமின்றி வீட்டை விட்டு வெளியேறுமல் படுத்த படுக்கையிலிருந்து 2 வருடங்கழித்து இறந்து போனுள். பெண்ணுக்குத் தகப்பனும் அதே கவலையாக இருந்து, தன்னந்தனியாய் வேருெருவர் துணையின்றி சாப்பாடு வசதியில்லாது நோய் வாய்ப்பட்டு மனைவி இறந்த இரண்டு ஆண்டுகட்குப் பிறகு இறைவனடி சேர்ந்தார். ஆண்டுகள் செல்லச் செல்ல அந்த ஊரில் இந்தக் கல்யாண சம்பவத்தை மறந்து விட்டனர். ஆனல், அவ்வூரில், பெண் மாப்பிள்ளை தேர்ந்தெடுக்கும் பொழுதும் கல்யாணங்கள் நடக்கும் பொழுதும் காணுமற்போன பெண் மாப்பிள்ளையைப் பற்றிய ஞாபகம் வராமல் இல்லை. பெற்ருேர்களும் அந்த சம்பவத்தை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு இன்றும் பெண்ணின் சம்மதமின்றி மாப்பிள்ளை பேச மனம் துணிந்தார்கள் இல்லை. கரும்பூரிலும், வயது சென்ற கிழவர்கள் இன்றும் முன்னவருக்கு நடந்த அவமானத்தை எண்ணி மறுமணம் செய்யத் துணிந்தார்கள் இல்லை.

மணவரைக்குத் தப்பிப்போன பெண் எங்கு போனுள் அவள் என்ன ஆனுள்? என்பன பற்றி வாசகர்கள் அறிய ஆசைப் படுவார்கள் அல்லவா? வயது சென்ற பெற்ருேர்களைத் தனியாக விட்டுப் போனுல் அவர்களுக்கு யார் துணை. ஒருவேளை பிள்ளையின் பிரிவின்சோகத்தால் அகால மரணமடைந்தால் அவர்களுக்குச் செய்ய வேண்டிய சவச்சடங்குகளை யார்செய்வது. அப்பொழுது கூடும் உற்ருர் உறவினர் அக்கம் பக்கத்தார் அத்தனை பேரும், பத்து மாதம் சுமந்து பெற்று, வளர்த்துப் பெண்ணுக்கி, ஆளாக்கி விட்டபலனு. பெற்றவர்களை விட்டு ஓடிவிட்டாள் என்று ஏசுவார்களே. இத்தனை அபகீர்த்தியும் தன்னைத்தானே சாரும் என்ற எண்ணமே இல்லாதவளாய், இருப்பினும் கடினமான மன உறுதி கொண்டவளாய் ஆண்களும் பெண்களும் இங்குமங்கும் நடமாடிக் கொண்டிருக்கும் பொழுதே யாருக்கும் தென்படாமல் கொல்லைப்புற வழியாக வெளியேறி விட்டாள். ஊரைக் கடந்து செல்லும் வரை திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே மன நடுக்கத்தோடு வெகு வேகமாக நடந்தாள். "பெற்ற மனம் பித்து பிள்ளை மனம் கல்லு' என்ற பழமொழியை அடிக்கடி நினைத்துக் கொண்டே போனுள். அன்று இரவு பௌர்ணமி. பூரணச் சந்திரனும் பூரண ஒளியை வீசிக்கொண்டு வானுலகையும் பூவுலகையும் அழகு படுத்திக் கொண்டிருந்தான். நக்ஷத்திரங்கள் சந்திரவொளியில் தங்கள் ஒளி மங்கிவிட்டதென மனக்கவலை கொள்வது போல் வானுலகெங்கும், மினுக்கு மினுக்கென்று விட்டு விட்டு பிரகாசித்துக் கொண்டிருந்தன. கடுகளவாவது வானத்தில் மேகம் என்பது தென்படவில்லை. பட்டப்பகல் போன்ற நிலவொளி. தன்னந்தனியாய் தப்பி ஓடும் ஒரு இளமங்கைக்கு நல்ல சந்தர்ப்பம் அல்லவா; ஊர் கடந்து சில மைல்களுக்கப்பால் கல்லும் முள்ளும் நிறைந்த காடு மூடான பாதை ஒன்று வளைந்து வளைந்து, மரம், செடி கொடிகள்

# நடவாத திருமணம்

அடர்ந்த ஒரு காட்டினூடே போய்க் கொண்டிருந்தது. அவ்வழியே புகுந்து விட்டாள் நம் கதாநாயகி. நேரம் ஆக ஆக நடையின் வேகம் அதிகரித்தது. சந்திர வொளியில் பட்சிகள் அங்குமிங்கும் பறந்து மரங்களில் உட்கார்ந்தன. நரிகள் சிற்சில சமயங்களில் ஊளையிட்டுக் கொண்டிருந்தன. ஆந்தைகள் இடை இடையே அலறிக் கொண்டிருந்தன. இந்தச் சப்தங்கள் எல்லாம் அவள் காதில் படவில்லை. தன்னுடைய காலடிச் சத்தத்தைக் கவனித்துக் கொண்டே நடக்கிருள். காலடி சத்தம் அதிகமாக அதிகமாக அவளுடைய நடையின் வேகம் அதிகரிக்க வேண்டுமென்பது அவளுடைய விருப்பம். இன்ன வழியாகப் போய்க் கொண்டிருக்கிருேம் இன்ன இடத்தை நோக்கிப் போகிருேம் என்பது கூட அவளுக்குத் தெரியாது. வெறி பிடித்தவள் போல் தலைவிரி கோலமாய்ப் போய்க் கொண்டிருந்தாள் வழியில் ஒரு இடத்திலும் அவள் உட்காரவும் இல்லை, நிற்கவுமில்லை. எத்தனையோ மைல்கள் கடந்துவிட்டாள். மன வேதனைப் பட்டு வாழ்க்கையை வெறுத்தவளுக்கு நடப்பதின் சிரமம் எப்படித் தோன்ற முடியும்? நடுநிசி கழிந்து இரவு 2மணி ஆகிவிட்டது. அப்பொழுது தான் வழியில் நால்வரைச் சந்தித்தாள். நால்வரும் வழிப் போக்கர்கள் அல்ல. திருடர்கள். தனியாகப் பெண் ஒருத்தி போகிருளெனப் பின் தொடர்ந்து 'நில்' என்ருர்கள். நடந்து கொண்டே திரும்பிப் பார்த்து 'யார் அது' என்று உரத்த குரலில் பெண் துடுக்காகப் பதில் சொன்னதுதான் தாமதம் அவளுடைய நடையின் அதிர்ச்சியிலும் வெருண்ட பார்வையிலும் தலைவிரி கோலத்தையும் கண்ணுற்ற திருடர்கள் பயந்து பேயோ, பிசாசோ, காளியோ, காட்டேறியோ எனத் தப்பி ஓடிவிட்டனர். அவர்கள் தன்னைப் பின் தொடருகிருர்களா அல்லது ஓடி விட்டார்களா என்றுகூடப் பாராது மேலே நடந்து செல்கின்ருள். தனியாக நடு இரவில் ஒரு பெண் தனி வழி எப்படிப் போக முடியும்? ஆகவே அவள் பெண் அல்ல பேய் தான் என்று நினைத்துத் தான் ஓடி விட்டனர் போலும். திருடர்களைக் கடந்து சில மைல் நடந்தாள். காகங்கள் கரைந்துகொண்டுவானத்தில்பறந்தன. அப்பொழுதான் இரவு கடந்தது என நினைத்தாள். 4½ மணி இருக்கும். ஒரு கட்குடியன், நிறைய குடித்து விட்டு இரவெல்லாம் பாதையில் உருண்டு புரண்டு எழுந்து பெண்ணை எதிர்நோக்கித் தள்ளாடித் தள்ளாடி நடந்துவந்தான். பெண்ணைப் பார்த்ததும் கலகலவென்று சிரித்துக் கொண்டு வாய் குழறி 'பெண்ணே' என்று அவள் கையைப் பற்றுவதற்கு முன்னதாகவே அவனைத் தன் இரு கரங்களால் தள்ளிவிட்டு வேகமாக நடந்தாள். குடியர்கள் எவ்வளவு பலவான்களாயிருந்தாலும் குடி வெறியால் பலஹீனமாய்த்தான் இருப்பார்களல்லவா? இரவு முழுதும் நடந்ததின் விளைவாக இப்பொழுதுதான் அவளுக்குச் சோர்வு ஏற்பட்டது. பாதையில் எங்காவது சற்று உட்கார்ந்து இளைப்பாறலாம் என்று எண்ணினுள். என்ருலும் மனமில்லாது மேலும் நடந்தாள். பொழுது புலர்ந்தது. தன்னை நோக்கி ஒருவர் கையில் ஒரு சிறு மூட்டையைத் தூக்கிக் கொண்டு வருகிறதைப் பார்த்தாள். கட்டமுதாக இருந்தால் அதைக் கொண்டு பசியைப் போக்கலாமா என்றும் நினைத்தாள். பசி வந்திடப் பத்தும் பறந்து போம் என்பது போல இரவு முழுவதும் முழு வைராக்கியத்தோடு எதையும் எதிர்பார்க்காமல் நடந்து வந்தவளுக்குப் பசி வந்தவுடன் சபலம் ஏற்படுவது இயல்பு தான். எதிர் நோக்கி வந்தவரும் அருகில் வந்துவிட்டார். பெண்ணை உற்று நோக்கினுர். பாதங்களில் தூசு படிந்திருப்பதைப் பார்த்தார். வெகுதூரத்திலிருந்து இரவு முழுவதும் சாப்பாடு இல்லாமல் தனியாக நடந்து வந்திருக்கிருள் என்று தெரிந்து கொண்டார். அம்மா குழந்தாய் நீ எங்கிருந்து வருகிருயம்மா, ரெம்ப தூரத்திலிருந்து இந்தக் கானகத்தின் வழியாக உன்னைத் தன்னந் தனியாக விட்டவர்கள் யார்" என்று வெகு உருக்கமாகக் கேட்டார். அவரைப் பார்த்த அளவில் பெண்ணுக்கு நின்று பதில் சொல்லும் படியானநிர்ப்பந்தம்ஏற்பட்டுவிட்டது அன்பென்னும் காந்தம் இருவரையும் இணைத்துவிட்டது. "என்பெற்ருேர்கள் செய்த தவறினுல் இக்கோலங் கொண்டேன்; திக்கற்றவருக்கு தெய்வமே துணையென்று இக்கானகத்தில் கடும்பயணம் வந்தேன்" எனறு சொல்லி முடிப்பதற்குள் மயக்கத்தால் கீழே சாய்ந்தாள். வழிப்போக்கர் தன் இரு கரங்களையும் கொண்டு பெண்ணைத் தாங்கி தன் மடியில் கிடத்தித் தன் மேல் துண்டினுல் வீசினுர். மயக்கம் தெளிந்து தன் கண்களைத் திறந்து தெரிந்தோ அல்லது மறந்தோ "அப்பா எனக்குப் பசியாயிருக்கிறது" என்ருள். அந்தப் பரிதாபமான நிலையைக் கண்டு தன் கண்களில் நீர் பெருகத் துடைத்துக் கொண்டு, தான் கொண்டுவந்த கட்டமுதில் கொஞ்சம் எடுத்து ஊட்டினுர். தந்தைக்கும் மகளுக்கும் உள்ள பந்தம் ஏற்பட்டு விட்டது. பசி ஆறிச் சோர்வு நீங்கித் தன் வரலாறு அனைத்தையும் ஆதியோடந்தமாக இடை இடையே விம்மி விம்மி அழுது கொண்டு வந்தவரிடம் சொன்னுள். 'புத்திர பாக்கியமில்லாத பாவிகளுக்கு உன்னை புத்திரியாகக் கொண்டதின் காரணமாக இன்ருேடு எங்கள் ஜென்மம் சாபல்யமாயிற்று வா போகலாம் நம்முடைய ஆசிரமத்திற்கு, என்று ஒரு மைல் தூரத்திலுள்ள அநாதை ஆசிரமத்திற்கு கூட்டிப் போனுர். வந்தவரைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமல்லவா? அவர் ஒரு தனவந்தர். புத்திரப்பேறில்லாதவர். தானும் தன்மனைவியுமாக ஒரு அநாதை ஆஸ்ரமத்தை ஏற்படுத்தி அதற்குத் தங்கள் ஆஸ்தியை மூலதனமாகக் கொடுத்து சுமார் 30 அநாதை ஆண் பெண் குழந்தைகளை வைத்து போஷித்துத் தகுந்த ஆசிரியர்களைக் கொண்டு கல்விகற்பித்து வந்தனர். இடையிடையே அனுதாபமுள்ள பக்கத்து ஊர் தனவந்தர்கள் பணஉதவி செய்தும் வந்தனர். ஒரு தனவந்தரின் அழைப்பின் பேரில் நன்கொடை வாங்குவதற்குத்தான் கால் நடையாகப் பிரயாணமானுர். வழியில் கண்டெடுத்த பெண்ணும் தங்கள் சேவைக்குப் பேருதவியாக இருக்கிறதென்று புருஷனும் மனைவியும் பெற்ற பிள்ளையினும் போற்றி வந்தனர். தன்னைப் பெற்றவர்களை முற்றிலும் மறந்து ஆசிரம அதிபர்களையே தனக்குற்ற பெற்ருேர்கள் எனக் கருதி, ஆசிரம வேலைகளைக் கண்ணுங் கருத்துமாகக் கவனித்துக் கொண்டுவந்தாள்.

ஒரு நாள் இரவு சாப்பாட்டிற்குப் பிறகு மூவரும் பேசிக் கொண்டிருந்தனர். அப்பொழுது தந்தை "குழந்தாய் நீ இங்கு வந்து இரண்டு ஆண்டுகள் கடந்து விட்டன. உனக்குப் பிடித்தமான ஒருவரை நீயே தேடிக் கொள்ளலாம் அல்லவா" என்ருர். "அப்பா தங்கள் வாக்கு எனக்கு வேதவாக்காக யிருந்தாலும் நான் கொண்ட விரதத்தை விட்டுக் கொடுக்க முடியவில்லை. நான் ஒரு ஆசிரமவாசியாக இருப்பதைக் காட்டிலும் வேறு என்ன எனக்குவேண்டும்? எற்கனவே எனக்கு வேண்டாத வரனைத் தேடிச் சகல சடங்குகளையும் செய்து விட்டனர். மணவரையில் உட்காருவதும் தாலி கட்டுவதும் தானே பாக்கி யிருந்தது. என்ருலும் அது நடவாத திருமணமாகி விட்டது. ஆகவே மீண்டும் ஒரு வரனைத் தேடி மணம் செய்வதின் அவசியம் என்ன? அர்த்தமென்ன? பணத்திற் காசைப்பட்டுப் பாழும் கிழவர்களுக்குச் சிறு பெண்களைக் கட்டிக் கொடுக்கும் கொடிய வழக்கத்தையுடைய பெற்ருேர்க்கு என்னுடைய நடவாத திருமணம் ஒரு சான்ருக இருக்கட்டும். மன்னிக்கவும்" என்று பதிலுரைத்தாள். "உன்னைக் கட்டாயப் படுத்த நான் விரும்பவில்லை. உன் எண்ணத்தை அறியவே இதை வெளியிட்டேன். இன்று முதல் நீயே இந்த ஆசிரமத்திற்குச் சர்வாதிகாரி" என்று சகல பொறுப்புக்களையும் அவளிடமே ஒப்படைத்து விட்டனர்.

அமராவதிபுதூர்

ஹரிஜனக் குடியிருப்பில் 12-8-46-ல் காரைக்குடி டாக்டர் திரு வி. எஸ் எஸ் மணி அவர்கள் தலைமையில் ஆகஸ்ட்தினம் கொண்டாடப் பெற்றது.





# ஜமீன் குடிகளுக்கு நிவாரணம்

## பிரதம மந்திரியின் பதில்

பிரதம மந்திரி சென்னை சட்ட சபையில்பதிலளிக்கையில்சில விஷயங்களில் சர்க்காரின் கொள்கையை விளக்கினுர். பிரதம மந்திரி பேசியதாவது:—

சில கஷ்டங்கள் இருப்பதால் இந்த சர்க்கார் ஜமீன்தாரிகளை அடியோடு ஒழிப்பதென்பது முடியாது. இச் சபையும் அவ்விதம் சட்டம் இயற்ற முடியாது. முன்பு காங்கிரஸ் மந்திரி சபை இருந்தபோது இந்தப் பிரச்னை சம்பந்தமாக ஒரு கமிட்டி நியமிக்கப் பட்டது. ஜமீன்தாரி முறையை ஒழிக்கவேண்டுமானுல் அதற்கு இந்தியா மந்திரியின் அங்கீகாரம் வேண்டுமாகையால் அந்த வழியை விட்டு மிகக் கடுமையான வரிப் பளுவால் கஷ்டப்படும் ஜமீன்தாரி குடிகளுக்கு எந்த வழியில் நிவாரணமளிக்கமுடியுமென்பதைப் பற்றி யோசித்தது. ஜமீன்தாரி பிரதேசத்திலும் ரயத்வாரி பிரதேசத்திலும் விவசாயிகளுக்கு எந்த வழியில் நிவாரணம் அளிக்கமுடியுமென்பதை இப்பொழுது சர்க்கார் ஆலோசித்து வருகின்றன.

முன்பு காங்கிரஸ் சர்க்கார் நியமித்த கமிட்டி இந்தப் பிரச்னையைப் பூராவும் கவனித்து எது நியாயமான வரி என்பதை நிர்ணயித்து 1802-ம் வருஷத்திலிருந்து 1810-ம் வருஷம்வரை செட்டில்மெண்ட் சன்னதுகள் கொடுக்கப்பட்டபோது நிர்ணயிக்கப்பட்டவர்கள்தான் கொடுக்கப்பட வேண்டுமென்றும் இதுதான் விவசாயிகள் கொடுக்கவேண்டிய நியாயமான வரி என்றும் அதை அதிகரிக்க ஜமீன்தாரிகளுக்கு அதிகாரம் இல்லையென்றும் கமிட்டி முடிவு செய்தது. அந்தக் கமிட்டியின் யாதாஸ்து வெளியான பிறகு அதன் சிபார்சுகளின்பேரில் ஒரு மசோதா தயாரிக்கப்பட்டது ஆனல் துரதிர்ஷ்டவசமாக மசோதாவைச் சட்டசபையில் கொண்டுவருவதில் சிறிது தாமதமேற்பட்டது. அதற்குள் காங்கிரஸ் மந்திரிசபை பதவியை விட்டு விட நேர்ந்தது. யுத்தகாலத்தில் ஜமீன்தாரி பிரதேசக் குடிகள் பட்டுள்ள கஷ்டம் கொஞ்சமல்ல. நான் முடிவு செய்த மசோதா அப்பொழுதே நிறைவேறியிருந்தால் ஜனங்களுக்கு அதனல் மிகுந்த சௌகரியமேற்பட்டிருக்கும். ஆனல் துரதிருஷ்ட வசமாக அப்பொழுது அது நடைபெறவில்லை. இப்பொழுது இந்த சர்க்கார் அதை மீண்டும் ஆலோசித்து வருகிறது. அந்நிய சர்க்காரின் கொள்கையை விட்டுவிடவில்லை. ஆனல் இப்பொழுது ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். ஜமீன்தாரிகளை அடியோடு ஒழித்துவிடுவதென்பது முடியாது. ஜமீன்தாரி குடிகளுக்கு நாம் நிவாரணமளிக்கலாம்.

காடுகளிலுள்ள மரங்களை வெட்டுவதாயும், இதில் குடிகளுக்குள்ள உரிமைகளை மறுப்பதாயும், மேலும் பிரஸ்தாபக் கமிட்டியின் யாதஸ்தில் கூறப்பட்டுள்ள, தீர்மானிக்கப்பட்டுள்ள குடிகளின் உரிமைகளைத் தடை செய்யாமல் இருக்கவும் இந்தப் பட்ஜட் கூட்டத்திலேயே சர்க்கார் ஒரு மசோதாக் கொண்டுவரவேண்டிய அவசியம் நேர்ந்திருக்கிறது. ஜமீன்தாரி குடிகளுக்கு எந்த வழியில் உடனே நிவாரணமளிக்க முடியுமென்பதை நாம் யோசிக்கவேண்டியிருக்கிறது. ஜமீன்தாரி முறை ஒழியும்வரை இதற்காகக் காத்திருப்பது முடியாது. ஆகையால் அவர்களுக்கு எந்த வழியில் உடனே நிவாரணமளிக்கமுடியுமோ அந்த வழியில் செய்யவேண்டியது அவசியம். இதில் இச் சபை சர்க்காருக்குப் பூரண ஆதரவளிக்குமென்று நம்புகிறேன்.

### ரயத்வாரி பிரதேசங்கள்

ரயத்வாரிப் பிரதேசங்கள் சம்பந்தமாகவும் எந்த அளவுக்கு வரிச்சுமையைக் குறைக்க முடியுமோ அந்த அளவிற்குக் குறைக்கப்படுமென்று நான் உறுதிகூற விரும்புகிறேன். ரயத்வாரி நிலங்கள் சம்பந்தமாக 1810-ம் வருஷத்தில் இருந்த நிலவரி முறைதான் சரியானதென்றும் அப்பொழுது விதிக்கப்பட்ட விகிதமே நியாயமானதென்றும் கருதப் பட்டது. இதை அடிப்படையாகக் கொண்டு தான் முன்பு மந்திரி சபையில் ரெவின்யூ மந்திரியாக இருந்தபொழுது ரெவின்யூ இலாகா காரியதரிசியாக இருந்த மிஸ்டர் ஹோரிட்ஸ்வொர்த் உதவியால் ஒரு மசோதா தயாரிக்கப்பட்டது. அந்த மசோதா அப்பொழுது சட்டமாக இயற்றப்பட்டிருந்தால் இப்பொழுது விவசாயிகள் நிலைமை வேறுவிதமாக இருந்திருக்கும் இப்பொழுது நிலமில்லாமல் இருக்கும் தொழிலாளருக்கோ அல்லது அவர்களது முன்னேர்களுக்கோ நிலம் சொந்தமாக இருந்திருக்கிறது. ஆனல் அவர்கள் அந்த நிலத்தின் பேரில் கடன் வாங்கி இறுதியில் கடன் வாங்கியவர்களுக்கே நிலத்தை அக்கடனுக்காக விற்றுவிட்டு அதே நிலத்தில் கூலி ஆட்களாக இருந்து வருகின்றனர். அந்தக் கொடுமை நாடகம் நாட்டில் நிகழ்ந்திருக்கிறது. இது சம்பந்தமாக என்ன சீர்திருத்தங்கள் செய்ய முடியுமோ அவற்றைச் செய்யச் சர்க்கார் உறுதி கொண்டிருக்கின்றனர். வருமானத்திற்கு மற்ற வழிகள் இருக்குமானல் ஒரு ஏக்கர் அல்லது அதற்குக் குறைவான நிலத்திற்கு வரி விதிக்காமல் சர்க்கார் ஏற்பாடு செய்வார்கள். ஆனல் இந்த நிலத்திட்டமே பல சிக்கல்கள் கொண்டதாக இருப்பதால் அத்தகைய நடவடிக்கையை உடனே எடுத்துக் கொள்ள முடியவில்லை. நிபுணர்கள் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. ரெவின்யூ இலாகா சம்பந்தப்பட்டவரை ஸ்ரீகரந்த் எல்லா சீர்திருத்தங்களையும் திருப்திகரமாகச் செய்வார் என்று சபை நம்பலாம்.

### ஹரிஜன அபிவிருத்தி

ஹரிஜன அபிவிருத்திபற்றி பிரதம மந்திரி சில வார்த்தைகள் கூறுகையில் ஹரிஜன அபிவிருத்திக்காகக் கொடுக்கப்பட்டுள்ள பணம் ஒரு நிதியாக இருந்து வருமென்றும் அதிலிருந்து அப்போதைக்கப்போது தயாராகும் திட்டங்களை நிறைவேற்றப் பணம் செலவழிக்கப் படுமென்றும், ஹரிஜன அபிவிருத்திக்காக இந்தப் பணம் செலவழிக்கப்படுகிறதென்ற காரணத்திற்காக ஒரு வகுப்பு பற்றிச் சர்க்கார் பாரபட்சமாக நடந்து கொள்வதாக நினைக்க வேண்டாம் என்றும், இந்தத்திட்டம் இறுதியில் சமூகத்திற்கே நன்மை யுண்டாக்குமென்றும் கூறினுர்.

### குன்றக்குடியில் ஆகஸ்ட்டு புரட்சி தினம்

12-8-46 காலை 8 மணிக்கு இ. தே. ரா அணிவகுப்புடன் ஓர் ஊர்வலம் நடைபெற்றது. திருமதி பங்கஜத்தம்மாள் அவர்களால் கொடி ஏற்றுவிக்கப்பட்டது. மாலை 6 மணிக்கு நடைபெற்ற பொதுக் கூட்டத்தில், பூலாங்குறிச்சி திரு வ. செ. சிவலிங்கம் செட்டியார் அவர்கள் தலைமையில் திருப்பத்தூர் தாலுகா காங்கிரஸ் காரியதரிசி ஸ்ரீ நா லெட்சுமணன், திருப்பத்தூர் தாலுகா விவசாயிகள் காங்கிரஸ் தலைவர், பிள்ளையார்பட்டி திரு முத்தழகு, காரியதரிசி குன்றக்குடி திரு தங்கவேலு காரைக்குடி மாணவர் காங்கிரஸ் காரியதரிசி திரு பழநியப்பன், திரு கருப்பையா, சாமிநாதராவ் இவர்களால் 42 ஆகஸ்டு புரட்சி தினத்தைப் பற்றி மிகச் சாங்கோபாங்கமாகப் பேசப்பட்டு இரவு 10-30 மணிக்குக் கூட்டம் நிறைவுற்றது.

தமிழ் மொழி வாழ்க

## மலாயா நாட்டுச் செய்திகள்

( 1-ம் பக்கத் தொடர்ச்சி )

முயற்சி எடுத்தும் தொழிலாளர்களுடைய கோரிக்கைகள் நியாயமான முறையில் பரிசிலனை செய்யப்படாததால் சமரசம் ஏற்படவில்லை.

கெ. செ. பொதுத் தொழிலாளர் சங்கப் பிரதிநிதிகள் சமரசத்திற்கு எஸ்டேட் மானேஜர் இணங்க மறுத்து விட்டார். எனவே 14-7-46 வரையில் 13-7-46ல் கெ. செ. தொ. சங்கம் எடுத்துக்கொண்ட சிரத்தையின் பேரில் ஷை எஸ்டேட் மானேஜர் கீழ்க் கண்ட கோரிக்கைகளுக்கு இணங்கவே தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்பினர்.

ரப்பர் (ஸ்டோர்) தொழிலாளர்களுக்குத் தினசரி சம்பளம் $ 2-00: புல் வெட்டுந் தொழிலாளர்கட்கு தினசரி சம்பளம் ஆண்களுக்கு $1-10 பெண்களுக்கு 95 காசுமாகும். சிறுவர்களுக்கு 60 காசு. பால் வெட்டும் தொழிலாளர்களுக்கு ஆண், பெண் பேதமின்றி $ 1-10 பால் வெட்டும் தொழிலாளர்களுக்கு குறிப்பிட்ட அளவுக்குமேல பவுண்டு ஒன்றுக்கு 6 காசு.

ஐந்து வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்குக் காலையில் ½ பயிண்ட், பாலும் பள்ளி செல்லும் பிள்ளைகளுக்கு ஒரு ரொட்டி, நடுப் பகலில் குழந்தைகள் எல்லோருக்கும் அரை பயிண்ட் கஞ்சி, வேலையில்லாத அநாதைக் குழந்தைகளுக்கு மாதம் 18 வெள்ளி, வேலை செய்யமுடியாத வயோதிகர்கட்கு ஆண், பெண் வித்தியாசமின்றி மாதம் 6 வெள்ளி படித்தரம்.

விதவைகட்கு உபகாரச் சம்பளம் சம்பளத்துக்குமேல் $ 3-00.

தகுந்த காரணமின்றி வேலையாட்களை வேலையிலிருந்து விலக்குவதில்லை.

---

### இந்தியாவுக்கு பர்மா அரிசி

பர்மாவில் இருக்கும் அரிசி இருப்பு விபரத்தை நேரில் கண்டறிந்து இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்யவும் சென்னையின் தேவைகளை ஆராய்ந்து உடன் இறக்குமதி செய்யவும் மிஸ்டர் டிக்ஸன் ஐ. ஸி. எஸ். ஸ்பெஷலாக நியமிக்கப்பட்டிருக்கிறார். இந்திய சர்க்கார் சம்மதம்பெற்று மிஸ்டர் டிக்சன் ரங்கூன் சென்றிருக்கிறார். பர்மாவில் ஏராளமாக அரிசி இருப்பதாகச் சர்க்காருக்குத் தகவல் வந்ததன்பேரில் இந்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

### இந்தோனேஷியாவிலிருந்து அரிசி ஏற்றுமதி

இந்தோனேஷியா வாக்களித்த 5-லட்சம் டன் அரிசியில் முதல் தவணையாக 2 கப்பல் அரிசி இம்மாதம் கடைசியில் சென்னைக்கு வருகிறது. அடுத்த தடவை வரும் அரிசி மைசூருக்கும் பிறகு இறக்குமதி செய்யப்படுபவை பம்பாய், வங்காளத்துக்கும் சப்ளை செய்யப்படும்.

### ஸ்தல ஸ்தாபனத் தேர்தல்கள்

செப்டம்பர், அக்டோபர் மாதங்களில் நடக்கவிருந்த ஸ்தல ஸ்தாபனத் தேர்தல்கள், சௌகரியத்தை முன்னிட்டு இன்றும் இரண்டு மாதங்களுக்கும் மேற்போகாமல் ஒத்தி போடப்படலாமென்றும் அது சம்பந்தமாக உத்திரவு சீக்கிரம் வருமென வும் தெரிகிறது.

## அரசாங்க கெஜட் அறிவிப்பு

சமீபத்தில் வெளியான மலாயா அரசாங்க கெஜட்டின் மூலம் பலவித ஜவுளி ரகங்களுக்கு அரசாங்கத்தால் விலை நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் சில வருமாறு

சாரோங் 42" X 72" சில்லறை விலை $ 2-60 மொத்த விலை $ 3-25 ஐரோப்பிய ரக அச்சடித்த காட்டன்: 36" கஜம் $ 1-10; மலாய், சீன ரகம் 36" $ 1-20; 27" கஜம் 85 காசு

அச்சடித்த காட்டன் ஷர்டிங்ஸ் 31" கஜம் $ 1- 0

கைத்தரி ஷர்ட்டிங்ஸ் 31" $ 1-5; 35" $ 1-4; 28" $ 1-3; 25" 82 காசு

பழுப்பு நிற ஷர்டிங்ஸ், கொசு வலைகள் 41 கஜம் 45 காசு.

பழுப்பு நிற ஷர்டிங்ஸ இங்கிலீஷ் ரகம் 31" கஜம் 80 காசு; இந்திய ரகம் 36" கஜம் 60 காசு.

காக்கி டிரில் 28" கஜம் $ 1-45; 56" $ 2-45; 72" கஜம் $ 3-35

வெள்ளை டிரில்; 36" $ 1-65; 28' $ 1-20.

வெள்ளை ஷர்ட்டிங்ஸ்: 36" கஜம் 75 காசு; 38" 80 காசு; 48" $ 1-25.

வெள்ளை பாப்ளின் 31" கஜம் 95 காசு.

கருப்பு பாப்ளின் 31" கஜம் $ 1-20.

படுக்கை விரிப்புக்கான துணி 56" கஜம் $ 1-90.

வெள்ளை கொசுவலை 36" கஜம் $ 1-92; 90" கஜம் $ 2-15.

உதவி விலை கட்டுப்பாட்டு அதிகாரியின் எழுத்து பூர்வமான அனுமதியின்றி கட்டுப்பாடு செய்யப்பட்ட துணிகளில் 10 கஜத்திற்கு அதிகமாக ஏற்றுமதி செய்வது தடுக்கப்பட்டிருப்பதாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

### மலாயா இந்தியர்களுக்கு நில வசதி

மலாயாவில் இந்திய நிவாரணக் கமிட்டி அதிகாரிகளுக்கும், மலாயா யூனியன் அதிகாரிகளுக்கு மிடையே சமீபத்தில் பயிற்செலவு சம்பந்தமாக ஓர் உடன்படிக்கை யேற்பட்டது. இவ்வுடன்படிக்கைப் படி பயிற்செலவு செய்ய விரும்பும் ஒவ்வொரு இந்தியனுக்கும் வீடு வாசலுள்ள 3 ஏக்கர் நிலம் கொடுக்கப்படும். இதில் குடியேற விரும்புகிறவர்கள் இந்திய நிவாரண கமிட்டி அதிகாரிகளுக்கு மனுச்செய்து கொள்ளலாம்.

மூன்று வருடங்கள் இந்நிலத்தில் வேலை செய்தபிறகு இனாமாக இந்நிலத்தை தங்கள் பெயருக்கு மாற்றிக்கொள்ளலாம் கன்செய் நிலமாகிய இந்நிலம் மலாயா யூனியன் தலைநகரான குவாலாலம்பூரிலிருந்து சுமார் 90 மைல் தூரத்திலுள்ள தஞ்சங் காரா என்னும் கிராமத்திலிருந்து 6 மைல் தூரத்திலுள்ளது.

மலயாவில் இந்திய நிவாரண கமிட்டியை ஏற்படுத்தி அதன் சேர்மனுகவுமான பண்டித ஜவஹர்லால் நேரு அவர்களால் வகுக்கப்பட்ட கைத்தொழில் விவசாயத் திட்டத்தில் ஒரு பகுதியான இது மலாயா இந்தியர்களுக்கு முடிவில் நிரந்தரமாக ஒரு விவசாய பண்ணையை ஏற்படுத்துவதை லக்ஷியமாகக் கொண்டதாகும்

ஆரம்பத்தில் இப்பண்ணையில் சுமார் 1000 பேர் குடியேறலாம். இதுவரை 200 பேர் குடியேறி நெல், காய்கறி முதலிய பயிர் செய்துள்ளனர். ஆடு, மாடு, கோழி முதலியவைகளும் வளர்த்து வருகின்றனர்.

இத்திட்டம் ஒரே சமயத்தில் இரண்டு நோக்கங்களைப் பூர்த்தி செய்கின்றனவென்று நிவாரணக் கமிட்டியின் கூட்டுக் காரியதரிசி திரு. பிரம்மசாரி கைலாசம் அ. பி. நிருபரிடம் கூறினர்.

முதலாவதாக திக்கற்ற இந்தியர்களுக்கு தாமய நிவாரயம் அளிக்கிவது. இரண்டாவதாக ஸ்தல அதிகாரிகளின் அதிக உணவு உற்பத்தி நோக்கத்தையும் அபிவிருத்தியடையச் செய்கிறது.

பயன் தரக்கூடிய காரியங்களுக்கன்றி பணவுதவி தருவதற்கு ஆக்க மளிக்க வேண்டாமென்று நேருஜி கூறியுள்ளாரென்று தெரிவித்த திரு. பிரமச்சாரி கைலாசம் அவர்கள் மேற்கண்டது போன்ற நீண்டகாலத் திட்டத்தின் அவசியத்தையும் வலியுறுத்தினர்.

இந்த விவசாய திட்டத்தோடு கோலாலம்பூரில் இந்தியருக்குச் சொந்தமான ஒரு கைத்தொழிற் சாலையை எடுத்து வேலை செய்வது சம்பந்தமாக கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

### பர்மாவுக்கு தனி நாணயம்

பர்மாவுக்கு என்று தனி நாணயம் அச்சடிக்கப்படும். இரண்டு பர்மியர்கள் உள்பட ஐந்து அங்கத்தினர் கொண்ட கரன்சி போர்டு இவ்வேலையைக் கவனிக்கும். இது 1947 ஏப்ரல் முதல் அமுலுக்கு வரும். லண்டனில் அக்டோபரில் கரன்சி போர்டு அமைக்கப்படும். ஸ்டர்லிங் விகிதத்தில் பர்மா ரூபாயின் மதிப்பு இந்திய நாணயத்துக்கு சமமானதாகவே இருக்கும். பர்மா நாணயத்தை தற்பொழுது கவர்னரின் ஏஜண்ட் என்ற முறையில் இந்திய ரிசர்வ் பாங் நிர்வகித்து வருகிறது.

### தமிழ்நாடு காங்கிரஸ்கமிட்டி கூட்டம்

ஆகஸ்ட் 18-ந் தேதி திருச்சி ஜில்லா திண்ணனூரில் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் திரு காமராஜ் தலைமையில் கூடியது.

தற்கால உணவுப் பொருள் நெருக்கடியை முன்னிட்டும் சமீபத்தில் தேசிய சர்க்கார் அமைக்கப்படவிருப்பதை முன்னிட்டும், ரயில்வே வேலை நிறுத்தம் செய்ய இது ஏற்ற தருணமல்ல வென்றும், 8 ஜில்லாக்களில் மதுவிலக்கு அமுல் நடத்த சென்னை மந்திரிசபை கொண்டுவந்த திட்டத்தைப் பாராட்டியும் எல்லா ஜில்லாக்களிலும் ஒரு வருஷத்துக்குள் மதுவிலக்கு அமுல், செய்யப்பட வேண்டுமென்றும், தொழிலாளர்களின் கஷ்ட நஷ்டங்களை மந்திரிகளிடம் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்றும், குற்ற பரம்பரைச் சட்டத்தை ரத்துச்செய்ய வேண்டுமென்றும், ஜமீன்தாரி, இனாம்தாரி முறையை ஒழிக்க வேண்டுமென்றும், தென்னாப்பிரிக்காவில் இந்தியர்களுக்கு இழைக்கப்படும் அநீதியைக் கண்டித்தும், தீர்மானங்கள் நிறைவேறின. ஸ்தலஸ்தாபனத் தொழில்களில் காங்கிரஸ் போட்டி யிடக்கூடாது என்று கொண்டுவரப்பட்ட தீர்மானம் தோல்வியுற்றது.

---

**தமிழ் மொழி வாழ்க**

---

## பட்டுநூல் கட்டுப்பாடு ரத்து

பட்டு ஜவுளி, நூல் இவைகளின் விலை, விநியோகம் ஆகியவைகளின் மீதிருக்கும் கட்டுப்பாட்டை இந்திய சர்க்கார் ரத்து செய்து விட்டார்கள். போதுமான சரக்குகளுக்கு அனுமதி அளிக்கப்பட்டு சீக்கிரம் வந்து சேருமென எதிர்பார்க்கப் படுகிறது.

### டிப்டி கலெக்டருக்கு மூன்று வருடக் கடுங்காவல்

அசாமைச் சேர்ந்த திரு நவஹான்ஸ் கோஸ்வாமி என்ற சப் டிப்டிக் கலெக்டர் நம்பிக்கை மோசடிக் குற்றம் சாட்டப்பட்டு 3 வருடம் கடுங்காவலும் பதினாயிரம் ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டார். கௌரியா யுத்த பூமியிலிருந்து பொது மக்களை வெளியேற்றும் செலவு வகைக்காக சர்க்கார் அனுமதித்த ரூ. 163,545-ஐ ஆள் மாராட்டம் செய்தும் தொகைகளைக் கொடுக்காமலும், பொய்யான நபர்களைச் சிருஷ்டித்ததாகவும் இவர்மீது குற்றம் சாட்டப்பட்டிருந்தது.

---



---

## நோட்டீஸ்.

### தேவகோட்டை டி. மு. கோர்ட்டு

O. S. No. 25 of 1946.
I. A. No. 469 of 1946.

மீனுக்ஷி — வாதி

அழகர்சாமி நாயுடு — 3-ம் பிரதிவாதி

வாதி உங்கள் வகையரு பேரில் அடமான பத்திரப்படி வரவேண்டிய தொகையை வரப்பற்ற பிருது செய்து 9-9-46-உ-க்கு வாயிதா போடப்பட்டிருக்கிறது. அதில் உமக்கு ஏதாவது ஆக்ஷேபனை இருந்தால் அன்று பகல் 10 மணிக்கு நீர் நேரிலாவது வக்கீல் மூலமாயாவது ஆஜராகி தெரிவித்துக் கொள்ளாவிட்டால் அன்று ஒரு தலையாகத் தீர்மானிக்கப்படும் என்பதை அறியவும்.

S. இராமசுப்பிரமணிய ஐயர்
வாதி அட்வகேட்
19-8-46

Edited, Printed and Published by S. MURUGAPPA at the Pandian Press, Magalir Illam, Amaravathipudur.

